# FOREWORD

I gladly assent to the learned author's request to write a few lines as foreword to this valuable little work of historical research. South Indian history is in course of steady construction, and many a problem is awaiting solution before the student and the general reader can have a reliable and complete work on the subject. Our Pandit has here written not only an informing account of the life and times of the great Chola Emperor, Kulottunga I, but has succeeded in solving the several knotty disputes which have arisen concerning his personal identity, his claims to succession in the imperial line of the Cholas, the aims and methods of his public life, &c. While fully appreciating the value of new epigraphical materials and the researches which have been made by his predecessors in this field, it is his complete and scholarly knowledge of Tamil literature as a Pandit and his critical study of the traditions embodied in it that have enabled him to throw light on all the doubts and difficulties which have arisen, and in such a manner as to teach correct conclusions. He has shown to us that it is scholars of his stamp, combining the old laborious methods of acquiring knowledge with the critical attitude of the modern scientific spirit, that the country will need in the future to enlighten it regarding its past and thereby give it proper inspiration for the future.

Finally, the value of his work is enhanced a hundred fold by being written in such a simple and popular, and at the same time elegant and erudite, Tamil style that it can not only command the appreciation of the learned, but carry the light of knowledge even to the ordinary inmates of every home in the Tamil land. I can unhesitatingly state that our learned Pandit and author ought to receive such a measure of grateful appreciation from his Tamil countrymen as will induce him to continue his career of historical research so as to enlighten other dark spots in South Indian History and help its people to arrive at a right comprehension of their place in the making of the India of the past and thereby also in the making of the India of the future.

Kumbakonam,
20—5—'29.

K. SUNDARARAMAN.

# முகவுரை.

இச் சிறு நூல், நமது தமிழ் நாட்டில் கி. பி. 11-வது நூற்றாண்டினிடையே சிறப்புற்று விளங்கிய முதற் குலோத்துங்க னென்னும், சோழ சக்கரவர்த்தியின் சரித்திரத்தை ஒருவாறு தொகுத்துக் கூறுவதாகும்.

அரசாங்க சிலாசாஸன பரிசோதகர்களும், அவர்களைப் பின் பற்றிச் சில சரித்திர நூலாசிரியர்களும், இச்சரிதத் தலைவன் முதற் குலோத்துங்கன் சோழ ஆட்சிக்கு உரியவனல்லனென்றும், அவன் வஞ்சனையால் நாட்டை அபகரித்துக் கொண்டவனென்றும் கருதுவ தோடு, அவ்வேந்தனது காலத்திற்றோன்றிய கலிங்கத்துப்பரணி யென்னுந் தமிழ் நூலில், அவனது அரசுரிமையை விளக்கிக் கூறி யுள்ள விஷயங்கள் ஸமயோசிதமாகச் செய்துகொண்ட கற்பனையே யாகுமென்றுந் தீர்மானித்துள்ளார்கள்.

ஆனால், தமிழ் நூல்களைக் கொண்டும், சிலா சாஸனங்களைக் கொண்டும் யான் ஆராய்ந்த அளவில், அவ்வாறு அம்மன்னன்பால் குற்றஞ்சாற்றச் சிறிதுமிடமில்லை யென்பதோடு, அவனே சோழ ஆட்சிக்குரியோ னென்பதற்கும், பரணியாசிரியர் கூறியவை உண்மையேயா மென்பதற்கும் சில ஆதாரங்கள் தோன்றினமையால் சென்ற ஓராண்டிக்கு முன்னர் 'ஹிந்து' 'சுதேசமித்திரன்' என்னும் பத்திரிகைகளில், முதற்குலோத்துங்கன் சோழ ஆட்சியைக் கைக் கொண்டதற்குள்ள உரிமையை விளக்கி, ஒரு வியாஸம் வெளியிட் டேன். அதனோடு, அம்மன்னன் விஷயமாகக் குடந்தை அரசாங்க கலாசாலைப் பத்திரிகையிலும், மதுரைத்தமிழ்ச்சங்கத்துச் செந்தமிழ்ப் பத்திரிகையிலும் யான் பிரசுரித்துள்ளவைகளை விளக்கியும், மற்றுஞ்

சில விஷயங்களைச் சேர்த்தும், மாணவர்களுக்குப் பயன்படும் வண்ணம் ஒரு நூலாக வெளியிடலானேன்.

ஆராய்ச்சியில் அபிப்பிராய பேதங்கள் தோன்றுவது இயல்பே யாதலின்,

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு
மப்பொருள் மெய்ப்பொருள் காண்ப தறிவு."

என்றபடி, அறிவாளர்களாவார், இந் நூலால் விளங்கும் சரித் திரவுண்மையை அங்கீகரித்து, காணப்படுங் குற்றங்களைப் பொறுத் தருள்வார்களென்று நம்புகின்றேன்.

எனது வேண்டுகோட்கிணங்கி, இந்நூலுக்கு ஒரு முன்னுரை யெழுதித்தந்தும், தங்கள் மேலான அபிப்பிராயங்களை யுதவியு மருளிய பெரியோர்களுக்கு எனது மனமார்ந்த வந்தனத்தைச் செலுத்துகின்றேன்.

கொட்டையூர்,
கும்பகோணம்.
1-5-1929

L. ஸ்ரீநிவாஸன்.

# முதற் குலோத்துங்கன்

## அத்தியாயம் 1.

புவிமாதின் முகமலரெனச் சிறப்புற்று விளங்கும் நம் பரத கண்டத்தின் தென்பாகத்தில், வடக்கே வேங்கடமென்னும் மலையையும், மற்ற மூன்று புறங்களிலும் கடல்களையும் எல்லைகளாகவுடைய நம் செந்தமிழ்நாடு சரித்திர ஆராய்ச்சிக்கு எட்டாத புராதன காலமுதல் பெரும் புகழ் கொண்டு விளங்கிவந்த சேர சோழ பாண்டியர்களென்னும் மூன்று அரச மரபினர்களால் ஆளப்பெற்று வந்தது. அதனால் நம் தமிழ்நாடு, சேரமண்டலம், சோழமண்டலம், பாண்டிமண்டலமென மூன்று பிரிவினதாக விளங்குவதாயிற்று.

இந்த மும்மண்டலங்களின் நடுநாயகமாகத் திகழுஞ் சோழவளநாடு, பொன்னியெனுந் தெய்வத் தன்மை வாய்ந்த காவிரிநதி பல கிளைகளாகப் பரந்து பாயப்பெற்று நீர்வள நிலவள குடிவளங்களாற் சிறந்து, கல்வி, செல்வம், கைத்தொழில், வாணிபம் முதலியவற்றிலுந் தழைத்தோங்கி, "நாடென்ப நாடாவளத்தன" என்ற முதுமொழிக்கோருதாரணமாக விளங்கிப் புகழ்பெற்றிருந்த தென்பது நமது பண்டைச் செந்தமிழ் நூல்களில் ஆராய்ச்சியுடைய அறிவாளரனைவரும் அறிந்ததேயாகும்.

இப் பொன்னியாடை நன்னிலப் பாவையை ஆண்டு வந்த சோழமன்னர்கள் பரிதியின் மரபினராவர். இதற்கேற்ப அவர்கள் அயோத்திமா நகரைத் தமது அரசிருக்

கையாகக் கொண்டு உத்தர கோசல தேசத்தை ஆண்டு வந்த இக்ஷுவாகு, மாந்தாதா முதலிய பெரியோர்களை யெல்லாம், தங்கள் குலத்தின் முன்னோர்களெனத் தமது வம்சாவளிகளிற் புகழ்ந்து சொல்லிக் கொள்ளுகின்றனர். இச் சோழவரசர்கள், தருமமும் தியாகமும் விளங்க மனு முறை கோணாமல் உலகமுவப்பச் செங்கோற் செலுத்தி வந்தன ரென்பதும், போரிற் புறங்கொடாத வீர வாழ்க்கையை உடையவர்க ளென்பதும், நமது பழைய சங்க நூல்களாலும், சிலாசாஸனங்கள் முதலியவற்றாலும் தெரிய வருகின்றன.

இச் சோழ பரம்பரையை அலங்கரித்த பெரியோர்களுடைய சரித்திரங்களை வரிசையாக விளக்கிக்கூறும் நூல் இதுகாறுந் தமிழ் மொழியில் ஒன்றும் வெளி வரவில்லை. ஆனால் சிலாசாஸன ஆராய்ச்சி ஏற்பட்டு, அதனை நமது அரசாங்கத்தாரும் அன்பும் ஊக்கமுங்கொண்டு வளர்த்து வருவதிலிருந்து, மேகத்தால் மூடுண்டு ஒளி மழுங்கியிருந்த நமது தென்னிந்திய தேச சரித்திரமாகிய பானுவும் ஒரு வாறு வெளிப்பட்டு ஒளிவீசத் தலைப்பட்ட தென்னலாம். இதற்கிணங்கத் திருவனந்தபுரம் சமஸ்தானத்தில் சாஸன பரிசோதகராயிருந்து ஸமீபத்திற் காலஞ்சென்ற ஸ்ரீமான் T. A. கோபிநாதராயர் M. A. அவர்கள், சோழவம்ச சரித்திரச் சுருக்கம் என்ற ஒரு நூல் தமிழில் எழுதி வெளியிட்டுள்ளார். அது நமது சோழநாட்டுப் பண்டைச் சரிதங்களை ஒருவாறு அறிந்துகொள்வதற்கு உதவியாகும். இனி, இவ்வித ஆராய்ச்சியின் பயனால், நம் பண்டைத் தமிழ்ப் புலவர்களாவார், தமது கற்பனா சக்தியைமட்டும் காட்டுவோர்க ளென்று, சிலர் கூறுவது போலன்றி இயற்கை நயத்திலும் ஈடுபட்டவர்களாய், உண்மையை

உள்ளவாறே உரைக்கும் உயர்குணமுமமையப் பெற்று
விளங்கிவந்தன ரென்பதை யாவரும் ஒருவாறு அறிந்து
கொள்ளவும் இடமுண்டாயிற்று. நிற்க:—

நமது பண்டைத்தமிழ் நூல்களையும் கல்வெட்டுக்கள்,
செப்பேடுகள் முதலிய சாஸனங்களையும் ஆதாரங்களாகக்
கொண்டு நோக்குமிடத்து, சோழவரசர்களைப் புராண
காலம் அல்லது பண்டைக் காலத்தவர்க ளென்றும், சங்க
காலம் அல்லது இடைக்காலத்தவர்க ளென்றும், பிற்கா
லத்தவர்க ளென்றும் மூன்று பிரிவினர்களாகக் கொள்
வது, ஒருவாறு தகுதியுடைத்தாகும். அம்முறை வகுக்
குங்கால், புராணகாலச் சோழவரசர்களில் மிக்க பெருமை
பெற்றவர்கள், சிபி, முசுகுந்தன், தூங்கு எயிலெறிந்த
தொடித்தோட் செம்பியன், மநுநீதிச்சோழன் முதலியோ
ராவர். அவர்களது தலைநகரங்கள் காவிரிப்பூம் பட்டின
மும் திருவாரூருமாம்: சங்ககாலம் அல்லது இடைக்கால
சோழ மன்னர்களிற் சிறந்தோர், சோழன் கரிகாற் பெரு
வளத்தான், பெருநற்கிள்ளி, கிள்ளிவளவன், சோழன்
செங்கணான் முதலியோராவர். அவர்கள் அரசிருக்கைத்
தானங்களாகக் கொண்ட நகரங்கள், காவிரிப்பூம் பட்டின
மும் உறையூருமாகும். பிற்காலச் சோழமன்னர்களிற்
பெருமையுற்றோர் விஜயாலயன், ஆதித்தன், முதற்பராந்
தகன், இரண்டாம் பராந்தகன், முதல் இராஜராஜன், இரா
ஜேந்திர சோழ தேவனென்னும் கங்கை கொண்ட
சோழன், முதற்குலோத்துங்கன், விக்கிரம சோழன் முதலி
யோராவர். இவர்கள் தங்கள் இராஜதானியாகக்கொண்ட
நகரங்கள் தஞ்சாவூர், கங்கைகொண்ட சோழபுரமுமாம்.

இனி, இப் பிற்காலச் சோழ வேந்தர்களில் ஒருவ
ரான முதற் குலோத்துங்க னென்பவனே நம் சரித்திரத்தை

வனுவான். இந்த முதல் குலோத்துங்கனது சரித்திரத்தை, நம் தமிழ் நூல்களையும், சிலாசாஸனங்களையும், அவற்றைப் பின்பற்றிச் சரித்திரத் துறையில் ஈடுபட்டு மற்றும் பலர் வெளியிட்டுள்ள ஆராய்ச்சிகளையும் ஆதாரங்களாகக் கொண்டு ஒருவாறு தொகுத்துக் கூறுவாம்.

## அத்தியாயம் 2.

தஞ்சைமா நகரைத் தமது அரசிருக்கையாகக் கொண்டு ஆண்டுவந்த பிற்காலச் சோழமன்னர்களில், கி. பி. பத்தாம் நூற்றாண்டின் இறுதியில் (அதாவது கி. பி 985 முதல் 1014 வரை.) சிறப்புற்றோங்கிய சிவபாத சேகரனென்னும், முதல் இராஜராஜ சோழனுக்குப்பிறகு அவன் மைந்தன் இராஜேந்திர சோழ தேவன் என்பவன் அரசிலைக் கைக்கொண்டு, விரமும் புகழுமோங்க, மனுநெறி தழைக்கத் தனது நாட்டைப் பரிபாலித்து வந்தான். அவ்வரசன், கல்வியிலும் பேன்மையுற்று விளங்கினுனதலின், அவனை யாவரும் பண்டிதசோழன் எனப் புகழ்ப்பெயரிட்டழைப்பாராயினர். அவ் வேந்தன், தன் தந்தையைப் போலவே, பெரும் படைகளைத் திரட்டி, திக்விஜயஞ் செய்து, இப்பொழுது சென்னை மாகாணத்தைச் சேர்ந்துள்ளவைகளும், அக்காலத்திற் பல மன்னர்களால் தனித் தனியே ஆளப்பெற்று வந்தவைகளுமான, பல நாடுகளை வென்று, அம் மன்னர்களை யெல்லாம் தன்னுணைக்குள்ளடங்கிய சிற்றரசர்களாகச் செய்தான். அதனோடமையாது அவ் வளவர் கோமான், ஒட்டரதேசம், கங்கைநதி பாயுமிடங்களான கோசலம், இலாடம், வங்காளம் முதலிய பல வட நாடுகளையும் வென்று, அந் நாட்டரசர்களால் அளிக்கப்பெற்ற பெருநிதிக் குவியல்களையும் மற்றும் பல விலையுயர்ந்த பொருள்களையும் திறையாகக் கொண்டான்.

மேலும், இவ் விராஜேந்திர சோழதேவன் தன்னோடு எதிர்த்துத் தருக்கிய வடநாட்டரசன் மகிபாலன் என்பானொருவனைச் சிறைபிடித்து அவன் தலைமேல் கங்கை நீர் நிரம்பிய குடமொன்றை ஏற்றித் தன் இராஜதானிக்குக் கொண்டுவரச் செய்தான். பிறகு, அம்மன்னவன் தன் நகருக் கருகாமையிலுள்ள, ஓர் ஏரியில் அந்தக் கங்கைப் புனலைச் சேர்த்து, அதைப் புனிதப்படுத்தினான். பின்னர் அவ் வேந்தன் கடலிற்றனது வலிய நாவாய்ப் படைகளைச் செலுத்திச் சிங்களம், யாழ்ப்பாணம் முதலிய நாடுகளடங்கிய ஈழமண்டலத்தையும், கீழ்க்கடலிலுள்ள * நக்கவாரம் முதலிய தீவுகளையும் தாக்கித் தன்வயப்படுத்திக்கொண்டு, † கடாரத்தையும் ஜயித்து அந் நாட்டரசனையும் பணியச் செய்து பெரும் புகழ்பெற்று விளங்கினானென்று அவனது ‡ மெய்க்கீர்த்திகள் கூறுகின்றன. இதனால் இவ் வரசனது ஆட்சிக் காலத்தில், சோழ ராஜ்யம் மிக்க பரப்பினையுடையதாகிச் சீருஞ் சிறப்பும் பெற்று ஓர் உன்னத நிலைமையிலிருந்ததென்றே சொல்லாம்.

மேற்கண்ட வெற்றிகள் காரணமாக இவ் வேந்தனுக்குக் 'கங்கைகொண்ட சோழன்', 'கங்கையுங் கடாரமுங் கொண்ட சோழ தேவர்' எனப் புகழ்ப் பெயர்கள் வழங்கலாயின. இம் மன்னவன் தனது அரிய வெற்றியின் அறி

* வங்காள விரிகுடாவிலுள்ள ஒரு தீவு. (Nicobar)

† கடாரம் பர்மா தேசத்தைச் சார்ந்த பெகு என்ற தேசம். அக்காலம் அங்கு அரசு செலுத்திய மன்னன் சங்கிராம விஜயோத்துங்கன் எனப்படுவான்.

‡ மெய்க்கீர்த்தி - அரசனது வெற்றி முதலிய அருஞ்செயல்களைத் தொகுத்துக்கூறும் ஒருவகைச் செய்யுள். "சொற்சீரடியாற் றொழிற்படுபுகழை, வேந்தன்பாற் கூறின் மெய்க்கீர்த்தியாகும்"— இலக்கண விளக்கம்.

குறியாக, X கங்கை கொண்ட சோழபுரம் என்ற பெயருடன் ஒரு அழகிய நகரம் அமைத்து, அதனைத் தனது இராஜதானியாகக் கொண்டனன். அந்த நகரின் நடுவே, தஞ்சை நகரில் தன் தந்தை முதல் இராஜராஜனாற் கட்டப்பெற்று விளங்கும் இராஜராஜேச்வரம் என்னும் பெரிய கோயிலைப்போல உன்னதமாக, உயர்ந்த வேலைப்பாடுகளுடனமைந்த ஒரு சிவாலயத்தை நிர்மாணஞ் செய்தான். இச் சிவாலயம் திருவிசைப்பா ஆசிரியர்களுள் ஒருவராகிய கருவூர்த் தேவர் என்பவரால் பாடப்பெற்றுள்ளது. இந்தச் சிவாலயத்திற்குக் கங்கைகொண்ட சோழேச்வரம் என்பது பெயர். இவ் வரசன் காலம் முதல் இந்தக் கங்கை கொண்ட சோழபுரமே சோழ மன்னர்களின் இராஜதானியாக விளங்கி வந்தது.

இந்தக் கங்கைகொண்ட சோழனுக்கு மூவர் மனைவியரிருந்தனர். ஆனால் இம் மன்னவனுக்கு அம்மங்கதேவி யென்னும் ஒரு பெண்ணைத் தவிர வேறு சந்ததிகள் இல்லை. இவ் வேந்தன், தன் மகளாகிய அந்த அம்மங்கதேவி யென்பாளை (தற்காலம் கோதாவரி, கிருஷ்ணா ஜில்லாக்கள் அடங்கிய) வேங்கிநாட்டிற் கிறைவனாக இருந்தோனும், கீழைச்சளுக்கிய மரபினனும், தனது சகோதரி குந்தவ்வை யென்பாளின் மைந்தனுமான இராஜராஜ நரேந்திர னென்பவனுக்கு மணஞ் செய்வித்தனன். ஆனால், கங்கை கொண்ட சோழன் தன் ஆட்சியிற் பல வாண்டுகள் திக் விஜயஞ் செய்ய வெளிநாடுகளிற் சென்றிருந்தானாதலால், தனக்குச் சகோதர முறையிலுள்ள

---

X இது தஞ்சை ஜில்லா (Lower Annicut) அணைக்கரை என்னுமிடத்திற்கு வடக்கே யுள்ளது. இவ்வூர் இப்பொழுது பெரும்பாகம் இடிந்து பாழான நிலைமையில் இருக்கிறது. இங்குள்ள இடிந்த கோட்டை மதில்கள், கட்டிடங்கள் இவற்றின் கற்களைக்கொண்டே கொள்ளிடத்திற்கு மேற்கூறிய லோயர் அணைக்கட்டு என்ற அணையைக் கட்டினார்கள் என்றுந் தெரிகிறது. இந்தக் கங்கைகொண்ட சோழபுரம் திரிசிராப்பள்ளி ஜில்லாவைச் சேர்ந்தது.

தாயாதிகளுள் ஒருவன் மகனான இராஜாதிராஜன் என்ப வனைத் தன் S பிரதிநிதியாக நியமித்திருந்தான். அவ் விராஜாதிராஜனே கங்கைகொண்ட சோழனது பிற்கால வாழ்நாட்களில் அரசியற் செயல்களை யெல்லாம் நடத்தி வருவானாயினன்.

• இவ்வாறு ஆண்டுகள் சில செல்ல, கங்கைகொண்ட சோழன் புதல்வியும் வேங்கி நாட்டரசன் மனைவியுமான அம்மங்கதேவிக்கு ஒரு மைந்தன் பிறந்தனன். அக் குழந்தைக்கு இராஜேந்திரனென்று, தன் தாய் வழிப்பாட் டன் கங்கைகொண்ட சோழனது பெயரே வைக்கப்பட் டது. பின்னர், கங்கை கொண்ட சோழனும் தன்மகள் வயிற்றுப் பேரனை அக்குழந்தையையே தனக்குப் புதல் வனாக I சுவீகாரஞ்செய்து கொண்டான். இந்தச் சுவீ

S இவ் விஷயத்தில் சிலாசாஸன பரிசோதகர்களும் அவர் களைப் பின்பற்றிய சரித்ரகலா விற்பன்னர்களும் அப்பிராய பேதப்படுகின்றனர். அது பின்னர் விளக்கப்படும்.

I அலர்மழை பொன்மழை பொழிய வதுகண்டு
கங்கைகொண்ட சோழன்—மகள்
குலமக டன் குலமகனைக் கொணர்த
மலர்க்கையா லெடுத்துக் கொண்டே.

அவனிபர்க்குப் புத்திரரு மடையாளம்
அவயவத்தி னடைவே நோக்கி
இவ னமக்கு மகனாகி யிரவிகுலம்
பாரிக்கத் தகுவ னென்றே.

தான் வேண்டிக் கொடலுமே தன்னுடைய
தேவியரிற் றலைமைத் தேவி
தேன்வேண்டும் மொழிச் செல்வித் திருமகட்குத்
திருமகனைக் கொடுத்த பின்னே.

திங்களினிளங் குழவி செம்மலிவ னென்றும்
செய்யபரி திக்குழவி யையனிவ னென்றும்
தங்களின் மகிழ்ந்திரு குலத்தரசர் தாமும்
தனித்தனி யுவப்பதோர் தவப்பயனுமொத்தே.

(கலிங்கத்துப்பரணி அவதாரம்)

கார புத்திரனை, பிறகு குலோத்துங்கன் என்னும் பெயரு டன் விளங்கும் நமது சரித்திரத் தலைவனுவான். மற்றும் சில்லாண்டுகட் கெல்லாம் கங்கைகொண்ட சோழன், தன் சுவீகார மைந்தன் இராஜேந்திரனை, தனக்குப்பின் அர சிற்குரியவ னென்பதை நிலைநாட்ட, அவனுக்கு II இள வரசுப் பட்டமுங் கட்டினன். ஆனல் இளவரசனை இரா ஜேந்திரன், இளங் குழந்தையாக இருந்தமையால், அர சியலை முன் பிரதிநிதியா யிருந்து நடத்திவந்த இராஜாதி ராஜனே நிர்வஹித்து வந்தான். இவ்வாறு சிலவாண்டு கள் சென்றன. கங்கைகொண்டசோழன் வயதின் முதிர்ச்சியால் தளர்ச்சியடையவே அரசியலில் அதிகாரங் கள் யாவும் பிரதிநிதியாக இருந்து ஆண்டுவந்த இராஜாதி ராஜனிடமே நிலைபெறலாயின. கங்கை கொண்ட சோழன் பேருக்கு மட்டும் அரசனுக இருந்து வந்தான்.

அக்காலத்தில் இப்பொழுது நிஜாம் ராஜ்யத்தின் மேற்பாகமும், பம்பாய் மாகாணத்தின் தென் பாகத்தின் ஒரு பகுதியுமாகிய, குந்தள தேசத்தினரசனும் மேலைச் சளுக்கிய மரபினனும், போரிற் சிறந்த வீரனுமாகிய ஆகவமல்லன் என்பானுடன் ஒரு கடும்போர் நிகழ்ந்தது. அப்போரில் இராஜாதிராஜன் வலிமை வாய்ந்த பெரும் படைகளைத் திரட்டிச் சென்று, அக்குந்தள வீரர்களைப் பலமுறை மிக்க திறமையுடன் எதிர்த்து வெற்றி பெற்று

---

II இசையுட னெடுத்த கொடி யபயன் அவனிக்கவனை யிள வாசில் வைத்த பிறகே.

(கலிங்கத்துப் பரணி அவதாரம்)

விளங்குசய மகளை இளங்கோப்பருவத்துச் சக்கரக்கோட் டத்து விக்ரமத் தொழிலால் புது மணம் புணர்ந்து. (S. I. I. Vol III. Part II. Page 159.)

விளங்குகின்றன. இவ் விராஜாதிராஜன் தன் உறவினர்களைத் தான் ஜயித்த சேர, பாண்டிய சளுக்கிய, நாடுகளிலும், கங்கபாடி, ஈழமண்டலம், பல்லவநாடு முதலிய நாடுகளிலும் பிரதிநிதிகளாக நியமித்து ஆண்டுவந்தனன். இவ் விராஜாதிராஜன் முற்கூறிய குந்தளயுத்தத்தில் அவர்கள் இராஜதானியாகிய கம்பிலி என்னும் நகரைப் பிடித்து அந்த மேலைச் சளுக்கிய அரசன் அரண்மனையையும் இடித்தெறிந்தான்.

இந்த மேலைச்சளுக்கியப் போரில் இராஜாதிராஜனுக்கு அவன் தம்பியர்கள் இருவரும் மிக்க உதவி புரிந்து வந்தனர். இவ் விராஜாதிராஜன் முற்கூறிய கம்பிலி யென்ற நகரில் தன் வெற்றியின் அறிகுறியாக ஒரு ஜயஸ்தம்பம் நட்டனன். இக்காரணத்தைக் கொண்டே கலிங்கத்துப் பரணியில் "கம்பிலிச் சயத்தம்பம் நட்டதும்" என்று இவ்வரசன் பாராட்டப் படுகிறான். இவ் வரசனுக்கு ஜயங்கொண்ட சோழன் என்று ஒரு பெயருமுண்டு.

இராஜாதிராஜன் இறந்ததும் மேற்கூறிய குந்தள யுத்தத்தில் அவனுக்குத் துணையாகச் சென்று போர் நடத்தி வந்த அவனது தம்பியர் இருவருள் மூத்தவன் பரகேசரி இராஜேந்திரதேவன் என்பவன் தானே சோழ மன்னனென அப் பொருகளத்திலேயே முடி கவித்துக்கொண்டு, தன் தமயன் இராஜாதிராஜனால் தொடங்கப்பட்ட அந்தக் குந்தளப் போரை மிக்க திறமையோடும் ஊக்கத்தோடும் நடத்திவந்தான். அதிற் சளுக்கிய வீரர் பலர் மடியவே, அவர்களது அரசன் ஆகவமல்லன் தோல்வியுற்றுத் தன் படைகளுடன் புறங்காட்டி யோடினன். இவ் விராஜேந்திரதேவனது தம்பி வீரராஜேந்திரன் என்பவன் இந்தப் போரில் சேனைத்தலைவனாக இருந்து இவனுக்கு உதவி

புரிந்து வந்தான். அக் காலம் சோழ ஆளுகையிலிருந்து விலகிச் சுயேச்சையை அடைய விரும்பிய ஈழ மண்டலத்தில் இவ்விராஜேந்திரதேவன் தனது வலிமை மிகுந்த படைகளைச் செலுத்தி, அந் நாட்டரசனைப் பணியச்செய்து அவ் வீழமண்டலத்தைத் தன் ஆட்சிக்குள் ளடக்கினன்.

இந்த இராஜேந்திரதேவன், தன்மகள் மதுராந்தகி யென்றும் தீனசிந்தாமணி யென்றும் அழைக்கப்படும் வடிவிற் சிறந்த பெண்மணியை நம் சரிதத் தலைவன் இராஜேந்திரனுக்கு (குலோத்துங்கன்) மணஞ்செய்வித்தனன். சுவீகார முறையில் அரசுக்குரியவனும், இளவரசுப்பட்டஞ் சூட்டப் பெற்றவனுமான இந்த இராஜேந்திரனுக்குத் தன் மகளை இவன் மணஞ்செய்வித்தது, தனக்கும் இராஜேந்திரனுக்கும் அரசியல் விஷயமாக, மன வேறுபாடுகள் உண்டாகாமலிருக்கக்கருதிய ஒரு இராஜதந்திரமாக இருக்கலாமென்று ஊகிக்கவும் இடந்தருகிறது. மேலும் இவ் விராஜேந்திர தேவன் ஆட்சிக் காலத்தில் ஏற்பட்டுள்ள * ஒரு சாஸனத்தில் இவன், அரச குடும்பத்தைச் சார்ந்த பலருக்கு அரசாங்கத்தில் உத்யோகங்களும், பட்டங்களும் அளித்துப் பெருமைப்படுத்தின னெனக் காணப்படுகின்றது. அதில் "தன் சிறிய தாதையாகிய எறிவலிக் கங்கை கொண்ட சோழனை இருமடிச் சோழனென்றும்" எனக் காணப்படுதலால் இவ் விராஜேந்திர தேவன் காலத்தில் கங்கைகொண்டசோழன் வாழ்ந்துவந்தானென்பது விளக்கமாகிறது. ஆனால் இவ்விராஜேந்திரதேவன் ஆண்டதெல்லாம் பத்து வருஷங்களுக் கதிகமாக இல்லை. இவனும் முற் கூறிய குந்தள யுத்தத்திலேயே இறந்தனன். இவன் மேலைச் சளுக்கிய இராஜதானியாகிய கல்யாணபுரத்திலிருந்து ஒரு

* South Indian Inscriptions Vol III. Page 59

துவாரபாலகர் விக்ரஹத்தைக் கொண்டு வந்தான். அது இப்பொழுது தஞ்சை ஜில்லா தாராசுரமென்று இப்பொழுது சொல்லப்படும் இடத்திலுள்ள ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரம் என்னுங் கோயிலில் வைக்கப்பட்டிருக்கிறது. இவ்வரசன் முடிவில் அந்த மேலைச் சளுக்கிப் போரில், * கொப்பம் என்ற இடத்தில் நடந்த யுத்தத்தில் பகைவரால் கொல்லப்பட்டான். "கல்யாணபுரமுங் கொல்லாபுரமுங் கொண்டருளி யானைமேற் றுஞ்சி யருளிய பெருமான் விஜயராஜேந்திர தேவர்" என்று ஒரு மெய்க்கீர்த்தியில் இவ்வரசன் புகழப்படுகிறானாதலின், இவனுக்கு † விஜய ராஜேந்திர தேவன் என்று ஒரு பெயர் உண்டென்றும், இவன் யானைமேலிருந்து போர் புரிகையில் பகைவரால் கொல்லப்பட்டானென்றும் தெரிகிறது. அந்த யுத்தம் முற்கூறிய கொப்பம் என்ற இடத்தில் நடந்ததே போலும்.

இராஜேந்திரதேவன் இறந்ததும் குந்தளப் போரில் இவனுக்குத் துணையாகவும், படைத்தலைவனாகவுமிருந்து

* கொப்பம் கிருஷ்ணா நதிக் கரையில் உள்ள ஒரு ஊர். அக்காலத்தில் அது புண்ணிய ஸ்நான கட்டமாகக் கருதப்பட்டுவந்தது. என்றும், அங்கு விசேஷ தினங்களில் யாத்திரிகள் ஏராளமாகக் கூடுவதுண்டென்றும் சாஸனங்களால் அறியப்படுகிறது.

† இராஜாதி ராஜனுக்கே விஜய ராஜேந்திர தேவன் என்ற பெயருண்டென்று சிலர் அபிப்பிராயப் படுகின்றனர். விஜய ராஜேந்திர தேவன் என்ற பெயருடன் காணப்படும் வேறு சில சாஸனங்கள் அவனைப் பரகேசரி யென்றே கூறுகின்றன. இவன் தமையன் ராஜாதி ராஜனோ ராஜகேசரி யாவன். ஆதலால் இராஜேந்திர தேவன் மேலைச் சளுக்கிய யுத்தத்தில் அடைந்த ஒரு வெற்றியின் பின் விஜய ராஜேந்திரன் என்ற பெயரை வைத்துக் கொண்டிருக்க வேண்டும். ஸ்ரீமான் கோபிநாதராயர் ஸ்ரீமான் A. V. வெங்கடராம ஐயர் முதலியவர்களின் அபிப்பிராயமும் இதுவே யாகும். அன்னோர்கள் இயற்றிய சோழவம்ச சரித்திரச் சுருக்கம் விக்ரமாதித்தன் சரித்திரம் என்னும் நூல்களிற் காண்க.

போரைத் திறமையுடன் நடத்திவந்த இவனது இளைய சகோதரன் வீரராஜேந்திரன் தன் சகோதரர் இருவரும் அப்பொருகளத்தில் இறந்ததையும் பொருட் படுத்தாமல் பழிக்குப் பழிவாங்க வேண்டுமென்ற நோக்கத்துடன் அம் மேலைச் சளுக்கிய யுத்தத்தை நடத்தி வருவானாயி னன். ஆனால், இராஜதானியாகிய கங்கை கொண்ட சோழபுரத்தில் இராஜேந்திர தேவனது மைந்தன் † இரா ஜமஹேந்திரனிருந்து ஆண்டு வந்தனன்.

இவ் விராஜமஹேந்திரன் மனுமுறை வழுவாமல் பிர ஜைகளுடைய நன்மையை நாடிச் செங்கோற் செலுத்தி வந்தானென்று தமிழ் நூல்கள் புகழ்ந்து கூறுகின்றன. இவ்வரசனும் பல வருஷங்களாக நடந்துவந்த முற்கூறிய மேலைச் சளுக்கிய யுத்தத்தில் ஆகவமல்லனுடன் ‡ போர் புரிந்ததாகத் தெரிவதால், இவனும் இவன் தந்தை யைப் போலவே அப் போரில் இறந்து விட்டானெனவெ எண்ணவும் இடமேற்படுகிறது. இம் மன்னன் திருவரங் கம் பெரிய கோயிலில் ஒரு பிராகாரம் அமைத்தானென் றும், அது இராஜமஹேந்திரன் திருவீதி யென்று பெயர் பெற்றுள்ளதென்றும் குருபரம்பரை, கோயிலொழுகு முதலிய வைஷ்ணவ சமய நூல்கள் கூறுகின்றன. மேலும் இவ்வரசன் அவ்வரங்க நகரில், திருமால் பள்ளி கொண்

† இராஜமஹேந்திரனது ஆட்சியைப்பற்றி அபிப்பிராய பேத முண்டு. சிலர் இவன் சோழ ராஜ்யத்திற்கு அரசனாக முடி சூட் டிக்கொண்டு ஆண்டு வந்தவனென்றும், சிலர் பிரதிநிதியாக இருந்த வனென்றும், கூறுவர். கலிங்கத்துப் பரணி, விக்ரமசோழனுலா முதலிய நூல்களில் இவன் அரசாண்டதாகவே குறிப்பிட் டிருக் கிறது. பிறகு, இவ்விஷயம் விளக்குவோம்.

‡ திருப்பாதிரிப்புலியூர் சாஸனம் No. 119 of 1902.

டிருக்கும் அரவணையைப் பல விலையுயர்ந்த இரத்தினங்களால் இழைக்கப் பெற்ற ஒரு கவசத்தினை லலங்கரித்தான் என்பது,

"பாடரவப்பள்ளி மேயார்க்குப் பன்மணியால்
ஆடரவப் பாய லமைத்தோனும்"

என்ற விக்ரம சோழனுலாவின் குறிப்பினா லறியப்படுகிறது. இம் மன்னவனது விஷ்ணுபக்தி குறிப்பிடத் தக்கதாம். இவன் இறந்ததும் இவனது சிறிய தாதையும், படைத்தலைவனாக இருந்து மேலைச் சளுக்கிய யுத்தத்தை நடத்தி வந்தோனுமாகிய வீர ராஜேந்திரன் அரசியலைக் கைக்கொண்டான். இவன் காலத்திலும் முன் நடந்து வந்த குந்தளப் போர் முடிவு பெறாமல் தொடர்ந்து கொண்டே வந்தது. வீரராஜேந்திரனே, தன் சகோதரர் இராஜாதிராஜன், இராஜேந்திரதேவன் ஆகிய இருவரும் இந்த யுத்தத்திலேயே உயிர்த்துறந்தார்களெனினும், அதைச் சிறிதும் பொருட்படுத்தாது, பழிக்குப்பழி வாங்க வேண்டுமென்ற நோக்கத்துடன் மேலைச் சளுக்கிய மன்னனும், போர்க்கஞ்சாப் பெரும் வீரனுமாகிய, ஆகவமல்லனை எதிர்த்தான். அந்தப் போரில் ஆகவமல்லனும், அவனது மைந்தர்கள் விக்ரமாதித்தன், ஜயஸிம்ஹன் ஆகிய இருவரும் பலமுறை தோல்வியடைந்து, தங்கள் வலிமைகுன்றி எதிர்நிற்க மாட்டாமல் புறங்காட்டியோடினர். ஆனால் ஆகவமல்லன் வீரமே தனது வாழ்க்கையாகக் கொண்டவனாதலால், போரிற்றன் பகைவனுக்கஞ்சிப் புறங்காட்டியோடும்படி நேர்ந்த அவமானத்தினால் மனம் நொந்து, அவ் வேக்கத்தினாற் கடுஞ்சுர நோய் கொண்டு அதைத் தாங்கமாட்டாது, துங்கபத்திரை நதியின் வெள்ளத்தில் விழுந்து உயிர் துறந்தனன்.*

* இதைப் பிரயோபவேசம் போன்ற ஜல ஸமாதி யென்பர்.

ஆகவமல்லன் இவ்வாறு உயிர்துறக்கவே, அவனது இளைய மைந்தனும் எப்பொழுதும் அவனது வலக்கை போலத் துணையாக நின்று போர்புரிந்து வந்த வீரனுமான விக்ரமாதித்தன் என்பவன், சிதறியோடிய குந்தளப் படைகளைத் திரட்டி, முன்னிலும் மிக்க வீராவேசத்துடன் வீர ராஜேந்திரனை எதிர்த்தான். அதில், குந்தள வீரர்கள் சோழ சேனைகளுக்கு எதிர் நிற்க மாட்டாது, தங்கம் படைக்கலங்களை யெல்லாம் அப் பொருகளத்திலேயே போட்டுவிட்டுச் சிதறியோடுவா ராயினர். தோல்வியுற்ற விக்ரமாதித்தனும், வேறு செயலற்று வீர ராஜேந்திரனிடம் வந்து சரணமடைந்தான். அவ்வாறு அடைக்கலம் புகுந்த அவனை வீர ராஜேந்திரன் பிழை பொறுத்தாரிக் ததுமன்றித் தன் குமாரியையும் அவனுக்கு மணஞ்செய் வித்தான். பிறகு, வீர ராஜேந்திரன் தன் மருமகனை விக்ரமாதித்தனை இரட்டபாடி யென்னும் ஒரு நாட் டிற்கு இறைவனுகவுஞ் செய்து பெருமைப் படுத்தினன். இதனுற்பல வருஷங்களாக நடந்து வந்த மேலைச் சளுக் கியப் போரும் முடிவடைய லாயிற்று.

இவ் வீரராஜேந்திரன் காலத்தில் புத்தமித்திரனர் என்னும் புலவர் பெருமான் அரிய தமிழிலக்கணமொன் றியற்றி அந் நூலுக்கு இவ்வரசனது பெயரால் வீரசோழி யம் என்று பெயரிட்டு, அரங்கேற்றினர். வீரராஜேந்தி ரன் ஏழு வருஷங்களுக்கு மேல் அரசாளவில்லை யென்று லும் இவனடைந்த வெற்றியும் கீர்த்தியும் மிக்க சிறந்தனவே யாகும். ஆனல் பல வருஷங்களாக ஏற்பட்ட யுத்தங்களா லும் நாட்டில் விளைவு குறைந்து உண்டான பெரும் பஞ்சத் தினுலும், அரசியலில் பிரஜைகள் வெறுப்புக்கொள்ளத் தலைப்பட்டனர். அச்சமயம், கங்கைகொண்ட சோழனும்

வயதின் முதிர்ச்சியினால் மண் வாழ்க்கையை விட்டு விண்ணுலக கடைந்தனன். சுவீகார மைந்தன் இராஜேந்திரன் அப்பொழுது அரசியலைக் கைக்கொள்ளத் தகுந்த பிராயமடைந்திருந்தும் வீரராஜேந்திரன் அரசுக்குரியோனை அவனிடம் அரசியலை ஒப்புவிக்காமையால் பிரஜைகளும் அதிகாரிகளும் கலகஞ் செய்யத் தலைப்பட்டனர். இக் கலகத்திற்கிடையே வீரராஜேந்திரனும் இறந்தனன். உடனே வீரராஜேந்திரன் மைந்தன் அதிராஜேந்திரன் அரசுரிமையைக் கைக்கொள்ள எண்ணினன். கலகம் வலுக்கலாயிற்று. சோழநாட்டின் நிலைமை இவ்வாறாக வடநாட்டிலிருந்த நம் சரிதத் தலைவன் இராஜேந்திரன் அச்சமயம் காளைப் பருவமடைந்து சிறந்த போர் வீரனாக விளங்கி வந்தமையால், சோழ நாட்டின் நிலைமையையும் பிரஜைகளுக்குத் தன்பாலுள்ள அன்பையும் அறிந்து, தனக்குரிய அந்நாட்டைக் கைக்கொள்ள அதுவே தக்க சமயமென்று எண்ணினன். அதனால் அவன் மேலைச் சளுக்கிய நாட்டிற்கு அப்பொழுது அரசனாக இருந்தோனும் ஆகவமல்லனது முதல் மைந்தனுமாகிய சோமேச்வரனது உதவியைப்பெற்று, சோழ நாடடைந்து அதிராஜேந்திரனைப் போரிற் கொன்று கலகத்தை அடக்கித் தானே சோழ சக்கரவர்த்தி யென முடிசூட்டிக் கொண்டான்.

## அத்தியாயம் 3

நம் சரித்திரத் தலைவனான இராஜேந்திரன் கீழைச் சளுக்கிய அரசகுலத்திற் பிறந்து சோழ வம்சத்திற் சுவீகாரஞ் செய்து கொள்ளப்பட்டவனென்பது முன்னரே கூறப்பட்டது. இவனது இளமைப் பருவத்தின் சரித்திரத்தைக் கூறுமுன் சளுக்கிய குலத்தின் வரலாற்றை ஒரு சிறிது தொகுத் துரைப்பது பொருத்தமுடையதாகும்.

சளுக்கியர் அல்லது சாளுக்கியர் எனப்படும் ஒரு மரபினர் ஆதியிற் கங்கை நதி பாயுமிடமான வட இந்தியாவில் ஒரு பிரதேசத்தை ஆண்டுவந்தனர். பின்னர் அவர்கள் நாளடைவில் முன்னேற்றமடைந்து, நருமதை யாற்றின் வடபாலுள்ள மத்திய இந்தியாவிற் பிரவேசித்து, தங்கள் ஆட்சியை அங்கு நிலைநாட்டிக் கொண்டனர். இவர்கள், தங்களைச் சந்திர குலத்தவர்களென்று சொல்லிக் கொள்கின்றனர். சரித்திர ஆராய்ச்சி வாயிலாக நோக்குமிடத்து, இச் சளுக்கியரில் மிகச் சிறப்புற்று விளங்கினவன் ஸத்யாச்ரய ஸ்ரீபுலகேசிவல்லவ மஹாராஜன் என்பவனாவான். அவன் நருமதையாற்றுக்குத் தெற்கே பிரவேசித்துத் தற்காலம் நிஜாம் ராஜ்யத்தில் பாதாமி என்ற பெயருடன் விளங்கும் * வாதாவி என்னும் நகரத்தைத் தனது தலைநகராகக் கொண்டு அரசு செலுத்திவந்தான். இந்தச் சத்யாச்ரயபுலகேசியின் ஆட்சிக்காலம் கி.பி. ஆறும் நூற்றாண்டின் பிற்பகுதியாகும். பிறகு இவனது பேரன் இரண்டாம் புலகேசி யென்பவன் காலத்தில் சளுக்கிய ராஜ்யம் முன்னினும் மிக விரிந்து வளரத்தலைப்பட்டது. இவ்விரண்டாம் புலகேசியே, அக்காலத்தில் (609—642) தென்னிந்தியாவில் மிக்க வலிமையும் செல்வாக்கும் பெற்றிருந்த பல்லவர்களைப் பலகால் எதிர்த்து, அவர்களது வலிமையை ஒருவாறு குன்றச் செய்தான். இவ்விரண்டாம் புலகேசி பின்னர் மத்திய இந்தியா முழுவதற்கும் தானே தலைவனாக விளங்கி அச்வமேதம்

* இந்நகர், முன் பரஞ்ஜோதியார் என்னுஞ் சிறுத்தொண்ட நாயனாரால் பல்லவ சேனையைக் கொண்டு தாக்கப்பட்டதாகப் பெரிய புராணத்திற் கூறப்பெற்றுள்ளது. இதனால் பல்லவர்களுக்கும் சளுக்கியருக்கும் பெரும்போர் நிகழ்ந்த தென்பது விளங்கும்.

என்னும் பெரிய யாகத்தையுஞ் செய்தான். இவன் ஆட்சிக் காலத்தில் இவனது இளைய சகோதரனான குப்ஜ விஷ்ணு வர்த்தனன் என்பவன், பெரும் படைகளுடன் தெற்கே, கோதாவரி கிருஷ்ணை யென்னும் நதிகளுக்கிடையே கீழ்க்கடலையடுத் துள்ள, வேங்கிநாட்டிற் பிரவேசித்து, அந்நாட்டைச் சளுக்கிய ஆட்சிக்கு உட்படுத்தினான். அக்கால முதல் குப்ஜவிஷ்ணு வர்த்தனனுடைய ஸந்ததியினரே வேங்கிநாட்டை ஆண்டுவந்தனர். இவ் வேங்கிநாட்டை ஆண்டுவந்த குப்ஜவிஷ்ணு வர்த்தனனுடைய மரபினர்க்குக் கீழைச் சளுக்கிய ரெனவும், தக்ஷிணத்தை யாண்டுவந்த புலகேசியின் வம்சத்தினர்க்கு மேலைச் சளுக்கிய ரெனவும் பெயர்கள் வழங்கலாயின.

இவ்வாறு, வேங்கிநாட்டிற் கீழைச் சளுக்கிய ஆட்சி நிலைநாட்டப்பெற்று ஏறக்குறைய மூன்று நூற்றாண்டுகள் வரையில் ஓங்கி வளர்ந்து வந்ததெனினும், அது கி. பி. பத்தாம் நூற்றாண்டின் இறுதியில் தன் வலிமையிற் குறையத் தொடங்கியது. அக் காலத்தில் சோழ நாட்டில் மிக்க புகழ் பெற்று விளங்கிய முதல் இராஜராஜன் என்னும் அரசன், தனது வலிமை மிகுந்த பெரும்படைகளை திரட்டித் திக்விஜயயாகச் சேர பாண்டி நாடுகளையும், தற்காலம் மைசூர் நாட்டைச் சேர்ந்த, கங்கபாடி, தடிகைபாடி, நுளம்பபாடி முதலிய நாடுகளையும் வென்று, வேங்கி நாட்டையும் வந்து தாக்கினான். அக்காலை, வேங்கி நாட்டிற்கிறைவனாயிருந்த கீழைச் சளுக்கிய மன்னன் விமலாதித்தனென்பவன்; வலிமை வாய்ந்த சோழப்படைக்கு எதிர் நிற்கமாட்டாது தோல்வியுற்றுச் சிறைப்பட்டனன். அன்று முதல் அவ் வேங்கிநாடு தன் சுதந்தர மிழந்து, சோழ ஆட்சிக்குள் ளடங்கிய ஒரு நாடாயிற்று. சோழ

சக்ரவர்த்தியாகிய முதல் இராஜராஜன், வேங்கி நாட்டை வென்று அதைத் தன் ஆட்சிக்குள் ளடக்கியதன்றி, சிறை பிடித்த விமலாதித்தனையும் தன் இராஜதானியாகிய தஞ்சைமாநகரில் சிலவாண்டுகள் தன் பாதுகாவலில் வைத்திருந்தான். இவ்வாறு சிலவாண்டுகள் செல்லச் சோழன் இராஜராஜனும், ஏதோ காரணம்பற்றி அவ் விமலாதித்தனைச் சிறையினின்றும் விடுவித்ததுமன்றி, தன் மகளாகிய குந்தவ்வை யென்னும் பெண்மணியையும் அவனுக்கு மணம்புரிவித்து, வேங்கி நாட்டை மீண்டும் அவனுக்கே அளித்தனன். இந்த மண நிகழ்ச்சியால் இவ் விருவேந்தரும் பகைமை நீங்கி ஒற்றுமைப்படலாயினர். ஆயினும் வேங்கிநாடு சோழ ஆட்சிக் குட்பட்டதாகவே கருதப்பட்டு வந்தது.

இது இவ்வாறாகச் சில வருஷங்களுக்கெல்லாம், அவ் விமலாதித்தனுக்குக் குந்தவ்வை யென்னும் அம் மனைவியிடமாக ஒரு மைந்தன் பிறந்தனன். அம் மைந்தனுக்கு இராஜராஜனென்று தாய் வழிப் பாட்டன் பெயரே இடப்பட்டது. அம் மைந்தனை இராஜராஜ நரேந்திரனென்று அழைப்பதுமுண்டு. இவ் விராஜராஜ நரேந்திரன், தன் தந்தை விமலாதித்தனுக்குப் பிறகு வேங்கி நாட்டிற் கரசனாகி, நாற்பது வருஷங்களுக் கதிகம் அரசு செலுத்தி வந்தான். இவ் வரசன் கல்வியிற் சிறந்தோனாக விளங்கி வந்ததுமன்றிக் கற்றோர்களைப் பெரிதும் ஆதரித்தும் வந்தான். இவனது விருப்பப்படியே நன்னயபட்டர் என்னும் புலவர் பெருமான், தெலுங்கில் மஹாபாரதம் ஒன்று இயற்றியுள்ளார். இப்பொழுதும் அந்நூல் ஆந்திரதேசத்தில் ஒரு சிறந்த காவ்யமாகப் போற்றிப் பாராட்டப்பெற்று வருகின்றது.

இவ்வரசன் தன் தாயுடன் பிறந்த மாமனும், அக்காலம் சோழ சக்ரவர்த்தியுமாயிருந்த கங்கைகொண்ட சோழனென்னும் இராஜேந்திர சோழதேவன் மகளாகிய அம்மங்கதேவி யென்பவளை, மணம்புரிந்து அவளிடமாக ஒரு புத்திரனை யடைந்தான். அக் குழந்தைக்கும், தாய் வழிப்பாட்டனது பேரால் இராஜேந்திரனென்றே நாமகரணஞ் செய்யப்பட்டது. கங்கைகொண்ட சோழனும், தனக்கு வேறு மைந்தன் இல்லாமையால், தன் மகள் வயிற்றுப் பேரனை இந்த இராஜேந்திரனையே தனக்குப் புத்திரனாகச் சுவீகாரஞ் செய்துகொண்டு அவனையே சோழநாட்டிற் கிளவரசாகவும் நியமித்தான். ஆனால் இராஜேந்திரனோ, அப்போது சிறு குழந்தைப் பருவத்தனா யிருந்தமையால் வேங்கி நாட்டில் தனது பெற்றோர்களுடன் வளர்ந்து வருவானாயினன். அக்காலம், சோழ நாட்டிற்கும் மேலைச் சளுக்கிய நாட்டிற்கும் பெரும்போர் நடந்து வந்தது. அந்தப் பெரும்போரிலே, சோழநாட்டின் பிரதிநிதிகளாக ஆண்டுவந்த இராஜாதிராஜனும், அவன் தம்பி இராஜேந்திரதேவனும் உயிர் துறந்தனர். எனினும், அவ்விருவர்களது தம்பியும், படைத்தலைவனாக இருந்து அந்தப் போரை நடத்தி வந்தோனுமாகிய வீரராஜேந்திரன் என்பான், அரசியலைக் கைக்கொண்டு முற்கூறிய மேலைச் சளுக்கிய யுத்தத்தை மிக்க திறமையுடன் நடத்தி வந்தான். இதற்கிடையே வேங்கி நாட்டையாளும், நம் சரிதத்தலைவன் இராஜேந்திரனது ஜனகதந்தையுமான இராஜராஜ நரேந்திரன், வயதின் முதிர்ச்சியால் விண்ணுலகெய்தினான். அப்பொழுது இராஜேந்திரன் காளைப்பருவ மடைந்து, சிறந்த போர் வீரனாக விளங்கி வந்தான். தந்தை இறந்தபின், இராஜேந்திரன் வேங்கி நாட்டிற் கிறைவனென முடிசூட்டிக் கொண்டு சில ஆண்டுகள் ஆட்சி புரிந்து வந்தான். அப்பொழுது

அவனது ஜனககுலமாகிய சளுக்கிய வம்சத்திற் கிணங்க அவன் ஸப்தம விஷ்ணுவர்த்தனன் என்ற பெயரை வகித்து வந்தனனென்பது அக்காலத்தில அந் நாட்டில் ஏற்பட்டுள்ள சாஸனங்கள் பலவற்றால் அறியலாகும். எனினும் பெருமை வாய்ந்த சோழ சக்ரவர்த்தியாகவேண்டிய தான், வேங்கி நாட்டிற் கரசனாக இருக்க மனமின்றித் தன் சிறிய தாதையாகிய விஜயாதித்தன் என்பவனை, அந் நாட்டின் பிரதிநிதியாக வைத்து விட்டுத் தான் திக்விஜயஞ் செய்வதாக வடநாட்டின் மேற்படை யெடுத்துச் சென்றான். வீரராஜேந்திரனே, தான் மேலைச் சளுக்கிய மன்னன் ஆகவமல்லனுடன் துங்கபத்திரை நதிக்கரையில பெரும போர் நடத்தி வந்தான். வடக்கே திக்விஜயஞ் செய்யச் சென்ற இராஜேந்திரன், மத்திய இந்தியாவிலுள்ள சக்கரக் கோட்டம் என்னுமிடத்தில் தன்னை எதிர்த்த தாராநகர்க் கரசனை வெருண்டோட அடித்துச் சயமகளைப் புதுமணம் புணர்ந்தான். இதுவே இவனது கன்னிப்போராகும். பிறகு வயிராகர மென்னுமிடத்தில் எதிர்த்த வடநாட்டரசனொருவனது யானைப்படைகளை யெல்லாம் கைப்பற்றிக் கொண்டான். இவ்வாறு இராஜேந்திரன் வடநாட்டில் பல அரிய வெற்றிகளை யடைந்து, சிறந்த வீரனாகத்திகழ்ந்து வருகையில், மேலைச்சளுக்கியப் போரில், வீரராஜேந்திரனும் ஆகவமல்லனைப் பலமுறைப் புறங்காட்டியோட அடித்தான். அந்த அவமானம் பொறுக்கமாட்டாதவனாய் ஆகவமல்லன் துங்கபத்திரை நதியில் விழுந்திறந்தான் ஆகவமல்லன் மைந்தன் விக்ரமாதித்தனும், அவன் தம்பி ஜயஸிம்மனும் வீரராஜேந்திரனைச் சரணமடையவே பல வருஷங்களாக நடந்துவந்த குந்தளயுத்தமும் முடிவடைந்தது. சளுக்கியப்போர் முடிவடைந்ததும் வீரராஜேந்திரன் சோழநாடு சென்று அந்த அரசு செலுத்தத் தொடங்கினான்.

அரசுக்குரியவனை இராஜேந்திரனிடம் ஆட்சியை ஒப்புவிக்காமல் வீரராஜேந்திரன் ஆள்வதில் பிரஜைகளும் அதிகாரிகளும் விருப்பமின்றிக் கலகம் செய்வாராயினர். பல வருஷங்களாகத் தொடர்ந்து நடந்த யுத்தங்களால் நாட்டில் விளைவு குறைந்து பஞ்சமு மதிகரிக்கவே, உள் நாட்டுக் கலகங்கள் வலுக்கலாயின. இவ்வாறு நாடு குழப்பத்தி லிருக்கையில் வீரராஜேந்திரனும் இறந்தனன். மேலைச் சளுக்கியப் போர் முடிந்த சில மாதங்களுக்குள்ளேயே இவ்வீரராஜேந்திரன் இறந்ததற்குக் காரணம், மேற்கூறிய உள்நாட்டுக் கலகமாகவே இருக்கவேண்டும். வீரராஜேந்திரன் இறந்தவுடன் அவன் மைந்தன் அதிராஜேந்திரன் ஆட்சியைக் கைக்கொள்ள எண்ணினன். ஆனல், அதிராஜேந்திரனுக்கு அவ்வளவு திறமையில்லையாதலின், அவனல் கலகத்தை அடக்கமுடியவில்லை. நாடோ தத்தளிக்கும் நிலைமையில் வந்துவிட்டது. கலிங்கத்துப் பரணியில் ஆசிரியர் ஜயங்கொண்டார்.

"மறையவர் வேள்வி குன்றி
மனுநெறி யனைத்து மாறித்
துறைகளோ ராறு மாறிச்
சுருதியு முழக்க மோய்ந்தே.

சாதிக ளொன்றோ டொன்று
தலைதடு மாறி யாரும்
ஓதிய நெறியி னில்லா
தொழுக்கமு மறந்து போயே.

ஒருவரை யொருவர் கைம்மிக்
கும்பர்தங் கோயில் சோம்பி
அரிவையர் கற்புச் சோம்பி
அரண்களு மழிய வாங்கே.

கலியிருள் பரந்தது" என இக் கலகத்தைத் தெளிவுபட விளக்கி யுள்ளார்.

சோணாட்டின் தன்மை இவ்வாறாக, இதைக் கேள்வி யுற்ற நம் சரித் தலைவன் இராஜேந்திரன், தனக் குரிமை யான சோழ சிங்காதனத்தைக் கைப்பற்ற இதுவே தக்க சமயமென்று எண்ணினான். ஆகவே, வடநாட்டில் தனது திக்விஜயத்தை நிறுத்திக்கொண்டு, சோழராஜ் யத்தை அடைவதற்கான வழியை நாடலானான். அச் சமயம் மேலைச் சளுக்கிய நாட்டில் ஆகவமல்லன் இறந்து போகவே, இளவரசனாக இருந்த அவனது மூத்தமைந் தன் இரண்டாஞ் சோமேசுவரன் என்பவன் அரசனாக இருந்தான். அந்தச் சோமேசுவரனுக்கு அவன் தம்பி விக்ரமாதித்தன், வீரராஜேந்திரனை அடைந்து, அவன் மகளை மணந்து இரட்டபாடிக் கரசனாக ஆனதிலிருந்து பகைவனை யடைந்து தன்னை வஞ்சித்தானென, அவன் பால் வெறுப்புண்டாயிருந்தது. இராஜேந்திரனே, விக்ர மாதித்தன் தன் மைத்துனனாகிய அதிராஜேந்திரனுக்கு உதவியாக வந்து தனக்கு இடையூறு விளைவிப்பான் என் பதை அறிந்து, சோமேசுவரனிடஞ் சென்று, இரட்டபாடி யை விக்ரமாதித்தன் அவனிடமிருந்து அபகரித்துக்கொ ண்டதையும், மற்றும் அவ் விக்ரமாதித்தனிடமுள்ள பல குற்றங்களையும் எடுத்துக்காட்டி, அச் சகோதரர்களுக்குள் முன்னிலும் அதிக பகைமையை யுண்டுபண்ணி, அச் சோமேசுவரனுடைய நட்பையும் பெற்றான். பிறகு இரா ஜேந்திரன் சோமேசுவரனுடைய படைகளையும் தனக் குதவியாகக் கொண்டு, சோழநாடு சென்று, அதிராஜேந்தி ரனை எதிர்த்தான். அக்காலம் சோழ சேனைகளும், பிரஜை களும் அதிராஜேந்திரனிடம் வெறுப்புற்றுக் கலகத்தி

சிறங்கியிருந்தனராதலின், அதிராஜேந்திரனால் எதிர் நிற்க முடியாமற் போகவே, சோழநாட்டின் வடபாகம் இராஜேந்திரன் கைவசமாயிற்று. இதை அறிந்த விக்ரமாதித்தன் ஒரு பெருஞ் சேனையுடன் தன் மைத்துனன் அதிராஜேந்திரனுக் குதவியாக வந்து இராஜேந்திரனை எதிர்த்தான். அப்போரில் விக்ரமாதித்தன் தோல்வியுற்றுத் தன்னாட்டிற்குத் திருப்பியோட வேண்டுவதாயிற்று. அதிராஜேந்திரனும் அப்பொருகளத்திலேயே இறந்தனன். இதனால், சோழராஜ்யம் முழுவதும் இராஜேந்திரன் வசமாயிற்று. பின்னர், இராஜேந்திரன் அக்காலம் சோழநாட்டின் தலைநகராக இருந்த கங்கைகொண்ட சோழபுரத்தில் குலோத்துங்கன் என்ற பெயருடன் சோழ சக்ரவர்த்தியென முடிசூட்டிக் கொண்டான். இங்ஙனம் இடையூறுகள் பல நிகழ்ந்தன வெனினும், முடிவில் கங்கைகொண்ட சோழனது விருப்பப்படியே, அவன் அவிகார மைந்தனும் மகள் வயிற்றுப் பேரனுமாகிய இராஜேந்திரனிடமே சோழ நாட்டின் ஆட்சி நிலைபெறுவதாயிற்று.



## அத்தியாயம் 4.

### வெற்றிமேம்பாடு



குலோத்துங்கன் அரசியலைக் கைக்கொண்டதும், நாட்டில் அப்பொழுது ஏற்பட்டிருந்த கலகங்களை யெல்லாம் அடக்கிப் பல சீர்த்திருத்தங்களைச் செய்யத் தொடங்கினான். முதன்முதலாக அவன், அந் நாட்டில் விதிக்கப் பெற்

திருந்த * சுங்கன் என்னும் உள்நாட்டு ஆயத்தீர்வையை நீக்கினான். இதனால் பிரஜைகள் அவனிடம் அன்பு பாராட்டத் தலைப்பட்டனர். இக் காரணம் பற்றியே அவ் வரசனுக்குச் சுங்கந் தவிர்த்த சோழன் என்னும் பெயர் வழங்குவதாயிற்று. அவ்வேந்தன், நாடெங்கும் நிலங்களை யெல்லாம் அளந்து, தரவாரியாகப் பிரித்து, வரிவாங்கு வதில் ஒரு முறையை ஏற்படுத்தினான். பிறகு, அம் மன்ன வன் அப்பொழுது மேலைச் சளுக்கிய அரசனாக இருந்தோ னும், தனக்குப் பகைவனுமான † விக்ரமாதித்தன் மேற், படை யெடுத்துச் சென்று, போரில் அவனையும் அவனது தம்பி ஜயசிங்கன் என்பவனையும் முறியடித்து, அவர்களைத் துங்கபத்திரை நதிக்கப்பால் துரத்தி, அந் நாட்டின் இராஜதானியாகிய கலியாணபுரத்தையும் கைப்பற்றிக் கொண்டான்.

---

* இதைத் தலைவரி என்று கருதுவாருமுளர். சுங்கன் என்பது ஆயத் தீர்வையேயாம் என்பதைத் தற்காலம் (Toll-gate) என்று சொல்லப்படும் இடத்திற்குச் சுங்கச்சாவடி யெனப் பெயர் வழங்கு வதினின்றும் அறியலாம். மேலும், சோழ ஆட்சியில் தலைவரி விதித்த கொடுங்கோன்மை எப்பொழுதேனும் இருந்ததாகத் தெரிய வில்லை. ஆதலின், சுங்கன் என்பதற்குத் தலைவரி யென்று ஒரு விபரீதப் பொருள் கொள்வது பொருந்தாது. பிரஜைகள் தம் நாட்டில் எங்கும் தடையின்றிச் சென்று வியாபாரம் செய்வதற்கு அனுகூலமாக, முன்னர், ஆங்காங்கு ஏற்பட்டிருந்த சுங்கன் என் னும் ஆயத்தீர்வையையே, நீக்கி நன்மை புரிந்தான் என்றே கொள்ள வேண்டும்.

† குந்தள நாட்டில், பிரஜைகள் தங்கள் அரசனான சோமே சுவரன் ஆட்சியில் அக்காலம் வெறுப்புக் கொண்டு கலகத்தை விளைக் கவே விக்ரமாதித்தன் அக் கலகத்தை அடக்கித் தன் தமயனான சோமேசுவரனை நீக்கித் தானே அரசனாயிருந்தான்.

இதனாற் குலோத்துங்கனுக்கு விருதராஜ பயங்கரன் என்னும் பெயருண்டாயிற்று. பின்னர் அவ்வளவர் கோன், நவிலை யென்னு மிடத்தில் கண்ட நாயகர்களது ஆயிரக்கணக்கான யானைகளைக் கைப்பற்றிக் கொண்டான். இந்த நவிலைப் போர் கலிங்கத்துப் பரணியிலுங் குறிக்கப் பட்டிருக்கிறது. அவ்வேந்தன் மற்றும் பல நாடுகளையும் ஜயிக்கக் கருதி, இப்பொழுது மைசூர் நாட்டின் பகுதிகளான, கங்கபாடி, ‡ சிங்கணம் முதலிய நாடுகளையும் கைப் பற்றிக் கொண்டான். அதனோடமையாது பிறகு அவன் வடகடல் தென்கடலிற் பாய்வதே போலப் பாண்டிநாட் டிற் றனது பெரும் படைகளுடன் பிரவேசித்தான். அக் காலம் பாண்டிநாடு ஐந்து பிரிவுகளாகித் தனித்தனியே பாண்டிய வம்சத்தினர் ஐவரால் ஆளப்பெற்று வந்தது. அப் பாண்டிய ரைவரும் ஒருங்கு சேர்ந் தெதிர்த்தும், வலிமை மிகுந்த சோழ சேனையின் முன் எதிர்த்து நிற்கு மாற்ற லின்றிப் படைகளுடன் சிதறியோடிக் கானகத் தும், மலை முழைகளிலும் ஒளிந்து கொண்டனர். அதனால், பாண்டி மண்டலம் நம் குலோத்துங்கனது உரிமைக் குள்ளாயிற்று. வெற்றியுற்ற அச் சோழமன்னவன் பாண்டி நாட்டில் தான் அடைந்த வெற்றியின் அறிகுறி யாகக் கன்னியாகுமரி, கோட்டாறு, பொதியமலை முதலிய பல இடங்களில் விஜயஸ்தம்பங்கள் நாட்டி, ஆங்காங்குத் தனது காவற்படைகளை அமைத்து, அந் நாட்டைத் தன் ஆணைக் குட்படுத்திக் கொண்டான். அப்பால், குலோத் துங்கன், தன் சேனைகளுடன் குடமலை நாடு நோக்கிச் சென்று, எதிர்த்தோர்களை வாளுல கேறச் செய்து, அந் நாட்டரசனையும் பணியச் செய்தான். அதுவன்றி, முதல்

‡ இது இலங்கைத் தீவு அன்று. மைசூர் நாட்டில் சிங்கண மென்று ஒரு சிறு நாடு உண்டு.

இராஜராஜ சோழனைப் போலச் சேரர்களது பெரிய துறைமுகமாகிய காந்தளூர்ச் சாலையென்னுமிடத்திலிருந்த வலிய கப்பற் படைகளை யெல்லாம் சின்னபின்னமாகத் தகர்த்தழித்தது மல்லாமல், போரில் மற்றும் பல வெற்றிகள் பெற்றுத் தன்னாடு திரும்பி வந்தான். இவ்வாறு குலோத்துங்கன், சேர பாண்டி நாடுகளையும் "குறுநில மன்னர்களது நாடுகள் பலவற்றையும் வென்று, அவர்கள் திறையாக அளித்த பல நிதிக் குவியல்களையுங் கொணர்ந்து, அவற்றால் தன்னாட்டிற் செய்த நன்மைகளும் திருத்தங்களும் பலவாம். இவ் வரசனது காலத்தில் சோழ ஆட்சி சென்னை மாகாணம் முழுவதும் வியாபித்திருந்தது. இவன் சென்னை மாகாணம் முழுவதும் ஒரு குடைக்கீழ் தன்னேரில்லாத் தலைவனாய் ஆண்டுவந்தா னென்பதற்கு அடையாளமாக, இப்பொழுதும் ஆங்காங்கு இவ் வேந்தனது காலத்தில் ஏற்பட்ட பல சாஸனங்களும் மற்றும் பல குறிப்புகளும் காணப்படுகின்றன



## அத்தியாயம் 5

### கலிங்கப்போர்



சோழ சக்ரவர்த்தியாகிய குலோத்துங்கன், திக்விஜயஞ் செய்து, வெற்றிமாலை புனைந்து, பலநாடுகளிற் கிடைத்த பெரும் பொருட் குவியல்களுடன், தன் நாட்டிற்குத் திரும்பிவந்ததும், தனது இராஜதானியாகிய கங்கைகொண்ட சோழபுரத்தில், வீரசிங்காதனத்தில் வீற்றிருந்து, விஜயா

பிஷேகஞ் செய்துகொண்டு, திரிபுவன சக்ரவர்த்தி யென்னும் பட்டம் புனைந்து கொண்டான். பிறகு அவ்வேந்தன், தன் நாட்டிற்குப் பல நன்மைகள் புரிந்து, பிரஜைகள் மகிழச் செங்கோல் செலுத்தி வருவானாயினன். இவ்வாறாக, ஒரு சமயம் இவ்வரசன், தனது தலைநகர்களுள் ஒன்றாகிய காஞ்சியம்பதியில், அத்தாணிமண்டபத்தில் மந்திரிகள், சேனைத்தலைவர்கள் முதலிய உடன்கூட்டத் ததிகாரிகள் புடைசூழ, அரசியற் செயல்களை யாராய்ந்து கொண்டிருந்தனன். அக்காலை, பற்பல தேசமன்னர்கள் அவரவர்கள் தங்கள் தங்கட்கு ஏற்பட்ட முறைப்படி வந்து, நம் சோழர் பெருமான் கழல்பணிந்து, செலுத்த வேண்டிய திறைகளைச் செலுத்தி, விடைபெற்றுச் செல்வாராயினர். அப்பொழுது அரசர்பிரான் குலோத்துங்கன், நமக்கு "இன்னுந் திறை செலுத்தவேண்டியவர் யாவர்?" என்று வினவ, உடனிருந்த அதிகாரிகள் "வடகலிங்க நாட்டரசன் அனந்தவர்ம சோடகங்கன் என்பான், சில வருஷங்களாகத் தான் செலுத்தவேண்டிய திறையைச் செலுத்தாமல் மறுத்து வருகின்றனன்" என்று கூறினர். கூறக்கேட்ட வளவர் கோமான், சினந்து "உடனே வடகலிங்கஞ் சென்று, அந்நாட்டைக் கைப்பற்றி, நம் ஆணையை மறுத்துச் செருக்கியிருக்கும் அவ்வரசனையும் சிறைபிடித்து வருதல் வேண்டும்" எனப் புகன்றனர். புகலக்கேட்ட படை நாயகன், வண்டை நகர்க் காவலன், கருணாகரத் தொண்டைமா னென்பவன், அரசர்க்கரசனை சோழபூபதியை வணங்கி, "உத்தரவளிப்பீரேல் ஈதோ யானே நமது படைகளுடன் சென்று, கலிங்கத்தை வென்று அவ்வரசனையுஞ் சிறைப்படுத்தி வருகின்றேன்". என்று கூறினன். மன்னனும் நன்றென விடையளித்தனன். உடனே நகரெங்கும் முரசறைவித்துப் படை

களைத் திரட்டி யணி வகுக்கப்பட்டன. கணிகள் மொழிந்த ஒரு நன்னாளில் வண்டையம்பதித் தலைவன் தொண்டைமான் கருணாகரனார், தனது மதவாரணமீ தேறவே 'நம் மரசர் பெருமான் வெற்றி பெறுவதாக!' என்ற வாழ்த் தொலியும், சங்கம் முரசம் முதலிய வாத்திய வொலியும் கலந்து முழங்கப் படைகள் வடதிசையாகக் கலிங்க நாட்டை நோக்கிப் புறப்பட்டன. சேனைகள் * பாலாறு, † குசைத்தலை, பொன்முகரி, வட பெண்ணை, கிருஷ்ணை, கோதாவரி, பம்பாநதி, கோதமை முதலிய நதிகளைக் கடந்து, கலிங்க நாட்டிற் புகுந்து, தாக்கத் தொடங்கின. அந் நாட்டிற் பல இடங்களும் சோழப் படைவீரர்களாற் சூறையாடப் பட்டன, கலிங்கக் குடிகள் வெருவியோடி, தங்கள் இறைவன்பாற் சென்று முறையிட் டழுதனர். ஆனால், அம் மன்னன் தன் குடிகளது துயரைப் பொருட் படுத்தாதவனாய் 'இந் நாடு சோழநாட்டிற் குட்பட்டதென ஒருவாறு அவர்களாற் கருதப்பட்டதெனினும், இக் கருணாகரனுக்கும், இவனுடன் வரும் படைகளுக்குங்கூட எளியதோதான்! நம் நாடு இவ்வளவு அரண்களையுடைய தென்றும் நம் படை வலிமை இத்தன்மைத் தென்றும் அறியான் போலும் இவ் வண்டையர்கோன்! இவனோ

* பாலாறு முன்னம் காஞ்சீபுரத்திற்கு வடக்காக ஒடியது என்றும், பிறகு ஏற்பட்ட ஒரு பெரு வெள்ளத்தால் அது இப் பொழுதுள்ளபடி மாறிவிட்டது என்றும் தெரிகிறது. (See S. I. Inscriptions Vol. II pages 361-374)

† குசைத்தலை — பாலாற்றிலிருந்து பிரியும் ஒரு கிளை நதி. இக்கிளை நதியின் பிரவாகமே Red Hills ஏரி என்னும் புழலேரியில் பாய்கிறது. சென்னை நகரின் ஜல வஸதிக்கு இந்தக் குசைத் தலை நதியே ஆதாரமாகும்.

நம்மை எதிர்ப்பது ! இவன் நம் முன் எம்மாத்திரம்?"
எனக் கனன்று பொங்கினான்.

அரசனது சிறுதன்மையையும், ஆராயாத துணிவையுங்
கண்ட அவனது அமைச்சர் முதலினோர், அம் மன்னனைப்
பார்த்து "ஐயனே! வருகின்ற சோழர் படையோ மிக்க
வலிமை வாய்ந்தது. அப் படையின் திறமையையும் வலி
மையையும், கண்டதுங் கேட்டது மில்லையோ? பாண்டிய
ரைவரும் அவர்களது படைகளும் பட்டபாடு பஞ்சும்
படாததன்றே! கடற் கிடையேயுள்ள விழிஞம் என்ற
இடம் அழிந்ததும், மேற்கடலை யடுத்த காந்தளூர்ச்சாலை
என்னுஞ் சேரர்களது பெருந் துறைமுகப் பட்டினத்தி
லுள்ள கப்பற் படைகள் கவிழ்ந்ததும், அறியாதார்
யாவரோ! கண்ட நாயகர் காவலிலுள்ள நவிலை யென்னு
மிடத்தில் அவ் வளவர் பெருமான் ஆயிரக்கணக்கான மத
யானைகளைப் பற்றிக்கொண்டதும், இத் தண்டின் வலிமை
கொண்டன்றோ? இதுவரையில் இச் சோழப் படையை
எதிர்த்து வெற்றியுற்றார் யாரேயுளர்? வீரவாழ்க்கையிற்
சிறந்த குந்தளப் படையே எதிர் நிற்க மாட்டாது பல
முறை நிலை தளர்ந்து முதுகிட்டோடிய தென்றால் நாம்
அப் படையை எதிர்க்க நினைப்பது தகுதியாகுமோ?"
என்று பலவாறு அரசன் மனத்திற்பட எடுத்துரைத்த
னர். ஆயினுமென்! கலிங்க மன்னனோ, விளைவதோரா
னாய்த் தன் அமைச்சராயினோர் கூறிய நன்மதியனைத்தை
யும் புறக்கணித்துத் தன் படைகள் அணிவகுத்துச்
சோழ சேனையை எதிர்க்குமாறு கட்டளை யிட்டனன்.
கலிங்கப் படையும் கலித்தெழுந்து எதிர்க்கத் தொடங்கின.
வீரசிங்கமாகிய கருணாகரத் தொண்டைமானோ தனது
படைகளைக் கடுகநடத்திக் கலிங்கப் படை வீரரைத் தாக்கி

ஞன். தாக்கவே கடும்போர் விளைந்தது. கலிங்கர்களது ஆயிரக்கணக்கான யானைகள், கரங்களறு பட்டனவும் சிரங்களறுபட்டனவும், கால்களறுபட்டனவும் வால்கள் அறுபட்டனவுமாகப் போர்க்களத்தில் விழுந்து புரண்டு உருண்டன. குதிரைகள் கால்களும் தலைகளும் துண்டிக்கப்பட்டுக் கீழே விழுந்து துடித்தன. எங்கும் குருதி வெள்ளம் பரந்து ஆறாகப் பெருகியோடிற்று. கலிங்கப் படைவீரர்கள் பட்டபாட்டை யென்னென்று கூறுவது! பெரும்பாலார் பொருகளத்தில் படைக்கலங்களாற் றாக்கப்பட்டு மாய்ந்தனர். எஞ்சிய சிலரும் எதிர்நிற்குந் துணிவிழந்து தத்தம் படைக்கலங்களையும் ஊர்திகளையும், கொடிகளையும் அப் பொருகளத்திடையே கைவிட்டுத் தப்பிப் பிழைத்து ஓடுவாராயினர். இவ்வாறு கலிங்கப் படையாவுஞ் சின்னபின்னமாக்கப்பட்டு நிலைகுலையவே, ஒளிந்து உயிர் தப்பிய வீரரில் ஒருசிலரோடு அக்கலிங்க மன்னன் அனந்தவர்மனும், வேறு செயலற்றவனாகிப் பிறரறியாமல், ஒருமலை முழைஞ்சில் ஓடி ஒளிந்து கொண்டனன். ஆகவே, கலிங்க தேயம் தண்டநாயகன் கருணாகரன் வயமாயிற்று. தொண்டைமானை, அதனையுடைமையாது தன் அரசர் பெருமானிடஞ் சொல்லி வந்த குறைப்படி, ஓடியொளிந்த அக் கலிங்கர்க் கிறைவனைச் சிறைப்படுத்திக் கொண்டுபோகக் கருதி, அவ் வரசனைப் பிடித்துக் கொணருமாறு தன் படை வீரர்களுக்கு உத்தரவிட்டனன். வீரர்களும, அந் நாட்டிற் சிறிதிடமும் விடாமற் றேடித்திரிவாராயினர். முடிவில் அக்கலிங்க மன்னன், பதுங்கியிருந்த குகையைக் கண்டுபிடித்து அவனைச் சிறைப்படுத்திக் கொணர்ந்தனர்.

வழியிலே சோழ வீரர்கள் முன், எதிர்ப்பட்ட கலிங்கப்படை வீரர்களிற் பலர் அஞ்சி நடுங்கி வேறு செய

வின்றி அவர்களிடம் சரண்புகுந்து பிழைத்தனர். சிலர் தங்களைப் பிறர் இன்னாரென்று அறியக்கூடாதபடி, உடலெங்கும் மாசு பூசிக்கொண்டு, தலைமயிரைப் பறித்தெறிந்து, உடுத்திருந்த அணிகலங்கள் ஆடைகள் யாவற்றையுங் களைந்துவிட்டு "ஐயன்மீர்! யாங்கள் கலிங்க நாட்டினரல்லேம். அமண சந்நியாசிகளாவேம்" என்று கூறி உயிர் பெற்றோடினர். வேறு சிலர் தங்கள் வில்நாண் கயிற்றினை யறுத்து மடித்து முந்நூலாக மார்பிற் றரித்தவர்களாய், "ஐயர்காள்! யாங்கள் கங்கைப் புனலாட வந்த அந்தணர்கள், எங்கள் வினைப்பயனால் அறியாது இங்கு வந்து விட்டோம்" என்று புகன்று அப்புறம் அகன்றனர். மற்றுஞ் சிலர் தலையை முண்டிதஞ் செய்து கொண்டும் போர்க்களத்திற் கிடந்த குருதி படிந்த கொடிச் சீலைகளைக் காவி வஸ்திரம்போ லுடுத்துக்கொண்டும், "யாங்கள் துறவொழுக்கங்கொண்ட சாக்கிய முனிவர்கள். யாங்கள் ஓரிடத்திலேயே இராமல் எங்கும் சஞ்சரித்துக் கொண்டு, போதி தத்துவர் உபதேசித்த அறவுரைகளை உலகிற்பரவச் செய்து வரும் வாழ்க்கையுடையேம்" என்று பகர்ந்து ஒரு புறமேகினர். பின்னுஞ் சிலர், பொருநர்களத்திற்றலை துணிக்கப்பட்டு இறந்து கிடந்த யானைகளின் மணிகளைக் கழற்றிக் கையிற் கொண்டனராய், "அளவிறந்த வீரர்களை மடிந்த இந்தக் கலிங்கப்போரினைக் கண்டு திகைப்புற்றோம். யாங்கள் தெலுங்கநாட்டுப் பாணர்கள்." என்று சொல்லி உயிர் பிழைத்துப் போயினர்.

இங்ஙனம் எதிர்ப்பட்ட வீரர்கள் பற்பல விதங்கூறி உயிர் தப்பியோடவே, சேனைத் தலைவன் கருணாகரத் தொண்டைமானும் போரிற் பற்றிய பல படைக்கலங்கள், அரண்மனையிற் கிடைத்த நிதிக்குவியல்கள், ஆயிரக்கணக்

கான யானை குதிரைகள், இவைகளுடன் சிறைப்பட்ட அம் மன்னனையுங் கைக்கொண்டு, தன் படைகளுடன் சோழநாடு நோக்கிச் சென்று, சோழ சக்ரவர்த்தியின் கழல்பணிந்தான். சோழன் குலோத்துங்கனும், கருணாகரன் றன் வென்றியைப் பெரிதும் புகழ்ந்து, அவனுக்குப் பலவித விருதுகளும் வரிசைகளு மளித்துப் பெருமைப் படுத்தினான். இந்தக் கலிங்க வெற்றியைச் சிறப்பித்தே, அப்பொழுது அம் மன்னனது சமஸ்தான வித்வானாக இருந்த கவிச்சக்ரவர்த்தி ஜயங்கொண்டார் என்னும் புலவர் பெருமான் கலிங்கத்துபரணி யென்னும் ஓர் அரிய நூலியற்றி, அதனை அவ் வரசன் ஸபை முன்னே அரங்கேற்றினர்.



# அத்தியாயம் 6.



“தெண்ணீர் வயற்றொண்டை நன்னாடு சான்றோருடைத்து” என்று நம் தமிழ் மூதாட்டி ஔவையாரால் புகழ்ந்து பாராட்டப்பெற்ற தொண்டைமண்டலத்தின் ஒரு பகுதியாகிய புலியூர்க் கோட்டத்திலே, குன்றை யூரென்னும் பதியிலே, சேக்கிழாரென்னும் குடிப்பெயரையுடைய ஒரு சைவவேளாண் மரபினர் வாழ்ந்து வந்தனர். அக் குலத்தினர், செல்வம், கல்வி, ஒழுக்கம், கடவுள் வழிபாடு முதலியவைகளாற் சிறந்து, விளங்கி வந்தனராதலின், சோழமன்னர்களும் அவர்கள் பால் அன்பு பாராட்டி, அரசியலில் அவர்களுக்கு உயர் பதவிகளும் பட்டங்களு மளித்து மேன்மைப்படுத்தி வந்தனர். அத்தகைய சேக்கிழார் மரபிலே அருண்மொழித்தேவர் என்ற பெயருடன் ஒரு

பெரியா ரிருந்தனர். அவரை யாவரும் அவரது குடிப் பெயரால் சேக்கிழாரென்றே அழைப்பது வழக்கம். அச் சேக்கிழாரும் கல்வி, செல்வம் முதலியவைகளால் நிரம்பப் பெற்று, ஒழுக்கம், மேன்மை, தெய்வவழிபாடு முதலிய நற்குணங்களாலு முயர்ந்து அக்குலத்துக்கோர் அணிகலமென விளங்கி வந்தனர். குன்றைப்பதித் தலைவரான சேக்கிழாரென்னும் அப் பெரியார் புகழ், நாடெங்கும் பரவவே, அக்காலத்தில் ஆட்சிபுரிந்து வந்த சோழமன்னன், (நம் குலோத்துங்கன் முன்னோரில் ஒருவன்) அவரைத் தம்பால் வரவழைத்து, அவரது கல்வியிலும் அருங்குணங்களிலும் ஈடுபட்டு, அவருக்கு உத்தமச் சோழ பல்லவராயர் என்ற பட்டமு மளித்து, அவரைத் தனது அமைச்சர் தலைவராக அமைத்துக்கொண்டான். இச் சேக்கிழாரே பின்னர், நம் சரிதத் தலைவன் (குலோத்துங்கனது) ஆட்சிக் காலத்திலும் அவனது அமைச்சராக விளங்கி வந்தார். அரசியற் செயல்களெல்லாம் அச் சேக்கிழார்ப் பெருமானது மேற்பார்வையில் நடந்து வந்தமையால், நம்சோழர் பெருந்தகை குலோத்துங்கன் செங்கோல் நாளுமோங்கி வளர்வதாயிற்று.

இஃதிவ்வாறாக, குலோத்துங்கன், சமணமத நூலாகிய சிந்தாமணியென்னும் சீவகன் சரிதத்தைப் பலகாலும் படித்து, அந்த நூலின் கவிநயத்திலும், பொருளுயர்விலும் கதையின் இனிமையிலும், முற்றும் மனத்தைச் செலுத்தியதன்றி, அந் நூலைப் போலச்சிறந்தது வேறொன்றுமில்லையென எப்பொழுதும் பலபடப் புகழ்வானாயினன். அதை அறிந்த சேக்கிழாரும், அரசன் புறச்சமய நூலாகிய சிந்தாமணியையே எப்பொழுதும் படிப்பதும், அதையே கொண்டாடுவதுமாக இருந்ததால், அது காரணமாக

அவனுக்குச் சமணமதத்தில் ஒரு பற்று ஏற்பட்டுவிடுமோ வென அஞ்சினர். ஆதலின் அவர், மன்னனை அணுகி புறச்சமயநூலும், புனைந்துரைச் சரிதமுமாகிய சிந்தாமணியினு முயர்ந்ததும், தெய்வத்தன்மை வாய்ந்ததும், உண்மை நிறைந்ததுமான, சிவனடியார்களாம் பெரியார்களது அரிய சரிதங்கள் பலவுள. அவற்றை அறிவதால் இம்மை மறுமைப் பேறுகளடையலாமென் றெடுத்துரைத்தனர். அவ்வுரை அமையக் கேட்ட அரசர் கோமான், அத்தகைய அருமை வாய்ந்த பெரியார்களது திவ்யசரிதங்களைத் தனக்கு உரைத் தருளவேண்டுமென அமைச்சர் பெருமானைக் கேட்டுக் கொண்டனன். அரசன் விருப்பப் படியே குன்றைக் காவலரும், சிவனடியார்களது செயற் கருஞ்செயல்க ளமைந்த சரிதங்களிற் சிலவற்றை அவனுக் கெடுத் துரைத்தனர். அவற்றைக் கேட்கும்போதே மன்னவன் மெய்ம்மயிர் சிலிர்த்துப் புளகமெய்திப் பரவசமடையலானுன். மேலும் அக் கோமகன், சிவனடியார்களது அரிய திருத்தொண்டுகளை நினைந்து நினைந்து, இருகை முடிமேற் குவித்துக் கண்ணீர் சொரியக் கரைந்துருகினுன். பின்னர், அவ் வேந்தன் சேக்கிழாரை நோக்கி, அமைச்சர் பெரும! பெருமை வாய்ந்தவர்களும், தெய்வத்தன்மை யுள்ளவர்களுமான சிவனடியார்தம், சரித்திரங்களை யெல்லாம் திரட்டி, உலக முய்யத் தாங்களே ஒரு நூலாகத் தமிழில் இயற்றித் தரவேண்டு மெனக்கேட்டுக்கொண்டனன். சைவ சமயந் தழைக்கவும், அறநெறி ஓங்கவும், விரும்பிய அவ் வமைச்சர் பெருந்தகையும், அரசர் பெருமான் கருத்திற் கிசைந்து, அவ் வரிய காரியத்தை மேற்கொண்டனர்.

அப்பால், குன்றைக் காவலரும், உலகு காவலன் விருப்பை முற்றுவிக்கக் கருதி, தில்லை நகரடைந்து, ஆங்

குக் கனகசபை யென்னும் திருமன்றுள் அன்பருக் கருள் செய்வான், திருநடம்புரியும் ஸ்ரீ ஆனந்த நடராஜப் பெருமான் திருவடிப்போதை வணங்கித் தான் ஒப்புக்கொண்ட பணியை நிறைவேற்றி வைக்கத் திருவருள் சுரக்கவேண்டுமெனப் பிரார்த்தித்தனர். ஆனால், 'தம்பிரான் றோழரென்னும் பெருமை வாய்ந்தவரும், சைவசமயாசாரியர்களுள் ஒருவருமாகிய, நம்பியாரூரர் சுந்தர மூர்த்தி நாயனாரே அடியார்களது பெருமைகளை எடுத்துரைக்க அஞ்சினார்களென்றால், அடியேன் எம்மாத்திரம்! அம்மெய்யடியார்களது அரிய சரிதங்களைத் தொகுத்து ஒரு நூலாக இயற்றித் தருவதாக, வேந்தனிடம் கூறிவந்த எனது பெருமிதந்தா னென்னே!' என, சேக்கிழார் பலவாறு நினைந்து மனம் உருகி வருந்துவாராயினர். கருணைக் கடலாகிய சிவபெருமானே, சைவநெறியினும், அடியார்கள் திறத்தும், ஆழ்ந்த பற்றுதலையுடைய சேக்கிழாரது வேண்டுகோட் கிசைந்து, அவர் மூலமாகச் சைவசமயத்தையும், தன் அடியார்களது பெருமைகளையும், உலகில் வளர்க்கக் கருதி, முன் ஆளுடைய நம்பியார் என்னும் சுந்தர மூர்த்தி நாயனார் திருத்தொண்டத் தொகைபாடத் தில்லைவாழந்தணர் என்று தாம் அடியெடுத்துக் கொடுத்ததேபோல ஒரு அசரீரி வாக்கில் அப் பொன்னம்பலத்தினுள்ளா ரனைவரும் இனிது கேட்க உலகெலாம் என்று ஒரு மங்களத் திருவாக்கை அடியெடுத்துக் கொடுத்தருளினார். அவ்வற்புதச் செயலைக் கண்ட சேக்கிழார் 'நாயேனையும் ஒரு பொருளாக மதித்து ஆட்கொண்டருளிய ஈசனது கருணைத் திறமென்னே!' எனப் பெருமான் அருளை வியந்து பலவாறு துதித்து உவகைக் கடலில் படிந்து நின்றனர். அத் திருமன்றிலிருந்த சைவத் திருநெறிச் செல்வர்களாகிய தில்லை வாழந்தணர் முதலான பெரியார் யாவரும்

ஈசன் றிருவருளைப் புகழ்வாரும், குன்றைக் காவலரின் பெருமையைக் கொண்டாடுவாரு மாயினர். அன்று முதல் சேக்கிழார்ப் பெருமானும், அத் தில்லையம் பதியிலேயே தங்கி, கோயில் ஆயிரக்கால் மண்டபத்திலே ஓரிடத்தி லிருந்து, சிற்றம்பலப் பெருமான் அருண் மொழியையே அடியாகக் கொண்ட,

> "உலகெலாமுணர்ந் தோதற் கரியவன்
> நிலவு லாவிய நீர்மலி வேணியன்
> அலகில் சோதிய னம்பலத் தாடுவான்
> மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்"

என்ற பாசுரத்தால் சபா நாதனைத் துதித்து, சுந்தரமூர்த்தி நாயனாரும், நம்பியாண்டார் நம்பியும் முறையே அருளிச் செய்துள்ள திருத்தொண்டத் தொகை, திருத்தொண்டர் திருவந்தாதி ஆகிய இரண்டு நூல்களையும் முதனூல்களாக்கக் கொண்டு, பெரியபுராணம் என்று வழங்கப்பெறும் திருத் தொண்டர் புராணத்தைப் பாடி முடித்தனர்.

சோழர் பெருமான் குலோத்துங்கனும், புராணம் முற் றுப்பெற்றது கேள்வியுற்றுப் பெருமகிழ்வடைந்து, தனது பரிவாரங்களுடன் தில்லை நகரடைந்து, சேக்கிழாரை வணங்கி, அவரையும் அவரியற்றிய புராணத்தையும், தனது பட்டத்து யானையின் மீது ஏற்றி, மிக்க சிறப்புடன் நகர் வலஞ் செய்வித்து, அப் புராணத்தைக் கனகஸபை முன்னே வைத்துப் பூஜித்து, அச் சேக்கிழார்ப் பெருமா னைக் கொண்டு, பல பெரியோர்கள் முன்னிலையில் அரங் கேற்றுவித்தான். அரங்கேற்றியபின்னர், அரசன் அச் சேக்கிழாருக்குப் பலவகைத்தான உயர்ந்த ஆடையாபர ணங்களும், நிதிகளும் அளித்துத் தொண்டர் சீர் பரவுவார்

என்ற பெருமை தங்கிய பட்டமுஞ்சூட்டி, மேன்மைப் படுத்தினான். சேக்கிழார்ப் பெருமானால் இயற்றப்பெற்ற அத் திருத்தொண்டர் புராணம், சைவத் திருமுறைகளிற் பன்னிரண்டாந் திருமுறையாகச் சேர்க்கப் பெற்று, சைவ சமயத்தினர்களால் ஒரு பாராயண நூலாகப் பூஜித்து ஓதப்பெற்று வருகின்றது.

திருவருட் செல்வராகிய சேக்கிழார்ப் பெருமானது அருமை பெருமைகளை முற்று முணர்ந்த குலோத்துங்க சோழன், தான் வணங்குதற் குரிய அப்பெரியாரைத் தனக்குள் ஓரமைச்சராக வைத்துக்கொள்ள அஞ்சினான். ஆதலின் அவரது விருப்பப்படி தில்லை நகரிலேயே அவர் வாழ்ந்து வர, வேண்டிய ஏற்பாடுகள் யாவுஞ் செவ்வனே அமைத்துக் கொடுத்துத் தன் இராஜதானிக் கேகினான். பின்னர் அம்மன்னவன், சேக்கிழாருடைய இளைய சகோதரர் பாலறுவாயர் என்பவரைத் தனது அமைச்சர் தலைவராகக் கொண்டு அவருக்குத் தோன்டைமான் என்ற பட்டமுமளித்துப் பெருமைப் படுத்தினான். பின், அப்பாலறு வாயருக்குத் தோண்டை மண்டலம் நின்று காத்த பெருமான் எனப் புகழ்ப் பெயர் பரவலாயிற்று. இச்சேக்கிழார் நாயனார், சோழ நாட்டில் காவிரியின் தென் கரையிலுள்ள, திருநாகேச்சுரம் என்ற தலத்தில் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள, நாகேச்சுரப் பெருமானிடத்தில் தமக்குள்ள பக்தி மேலிட்டால், தமது குன்றைப்பதியில் திருநாகேச்சுரம் என்று, ஒரு திருக்கோயி லமைத்து, அவ்வாலயத்தில் அமர்ந்தருளிய நாகேச்சுரப் பெருமானை வழிபட்டுப் பல திருத்தொண்டுகளியற்றி வந்தாரென்றும், அப்பெருமானே அவரது மரபினர்க்குக் குலதெய்வமாகக் கருதப்பட்டு வந்ததென்றும் தெரிய வருகிறது.

பின்னர் சேக்கிழாரும் தில்லையம்பதியிலேயே தங்கியிருந்து சிற்றம்பலவாணன் திருநடனஞ் தெரிசிப்பதிலும், சிவனடியார்களை உபசரித்து வழிபடுவதிலும் தமது காலத்தைச் செலுத்திவந்து, அந்த ஆனந்த நடராஜப் பெருமானது குஞ்சித பாதநீழலை யடைந்தனர்.

இச்சேக்கிழார் சரித்திரத்தை உலகமுய்ய உபகரித்த பெரியார், கொற்றவன் குடி உமாபதி சிவாசாரியர் என்பவராவர். இச்சரிதம் 'சேக்கிழார் நாயனார் புராணம்' என்ற பெயருடன் பெரியபுராணத்தின் தலைப்பிற் சேர்க்கப் பெற்றுள்ளது. மற்றைய வரலாறுகள் பின்னர் விவரிப்பாம்.



## அத்தியாயம் 7.



நம் கதாநாயகன் இராஜேந்திரனுக்குக் குலோத்துங்கன் என்னும் பெயரைத் தவிர்த்து அநபாயன், அபயன், சென்னி, ஜயதரன், கரிகாலன், உபய குலோத்தமன், சுங்கந் தவிர்த்த சோழன், விருதராஜ பயங்கரன், கோனேரின்மை கொண்டான், திருநீற்றுச் சோழன் எனப் பல பெயர்களும் வழங்கி வந்தன. இவ்வரசனுக்குப் பரகேசரி இராஜேந்திர தேவன் மகளான, தீனசிந்தாமணி யென்னும் மதுராந்தகியைத் தவிர்த்துத் தியாகவல்லி, எழிசை வல்லபியென வேறு இருமனைவிய ரிருந்தனர். அவர்களுள் தீனசிந்தாமணியே பட்டத்து அரசியாக விளங்கி வந்தாள். குலோத்துங்கனது ஆட்சியின் பிற்காலத்திற் காணப்படுஞ் சாஸனங்களில் தியாகவல்லியின் பெயரே காணப்படுவதால், அக்காலத்தில் முதன்மனைவியான மதுராந்தகி

இறந்து விட்டனனென ஊகிக்கப் படுகிறது. கலிங்கத்துப் பரணியிலும் தியாகவல்லியின் பெயரே காணப்படுவதால், கலிங்கமெறிந்த காலத்தில் தியாகவல்லியே பட்டத்தரசி யாக இருக்கவேண்டும். இவ்வரசனுக்கு ஆறு மைந்தர் களும் ஒரு பெண்ணுமிருந்தனர். அவர்களுள் இவனுக்குப் பின் பட்டத்திற்கு வந்தவன், விக்ரம சோழன் என்பவ னுவன். இவ்வரசனுக்கு, விக்கிரம சோழனுக்கு முன் பிறந்த மைந்தர் மூவர் இருப்பதாகச் சாஸனங்களிற் காண ப்படினும், விக்கிரம சோழனே அரசுரிமையைப் பெற்ற மையால் அம் மூவரும் குலோத்துங்கன் காலத்திலே அதா வது இளங்கோப் பருவத்திலேயே இறந்தன ரென்றே ஊகிக்க வேண்டி யிருக்கிறது. ஆதலின், இவ்வரசன் செல் வமும் சிறப்பும் பெற்று ஓர் உன்னத வாழ்விலிருந்தன னெனினும், புத்திரசோகத்தாற் பீடிக்கப் பட்டவனென் றே கருத வேண்டி யிருக்கிறது. இம் மன்னவன் தன் மனைவிமக்களிடத்தும், அரச குடும்பத்தைச்சேர்ந்த மற்ற எல்லா உறவினர்களிடத்தும் மிக்க அன்புள்ளவனாக இருந் தான்.

இவ்வேந்தன் திக்விஜயஞ்செய்து, பகையரசர்கள் யாவ ரையும் ஒடுக்கி, வெற்றிமாலை புனைந்து, திரிபுவனசக்ரவர்த் தியெனப்பட்டம் புனைந்து விஜயாபிஷேகஞ்செய்து கொண் டான். சாஸனங்களில், இவனது பெயர் 'திரிபுவனசக்கர வர்த்திகள் † இராஜகேசரி வர்மரான உடையார் ஸ்ரீ குலோத்துங்க சோழதேவர்' எனக் காணப்படுகின்றது.

† சோழ அரசர் ஒவ்வொருவரும் ராஜ கேசரி அல்லது பரகேசரி யெனப் பெயர் கொள்வது வழக்கம். ஒருவன் ராஜ கேசரியாயின் அவன் பின் வருவோன் பரகேசரி யெனப் பெயர் புனைந்து கொள்வான்.

இவ்வரசன், முன் நாட்டில் ஏற்பட்டிருந்த சுங்கவரியென்னும் ஆயவரியை நீக்கியதுமன்றி, நாடெங்கும அளந்து தரவாரியாகப்பிரித்து, அந்த அந்த நிலத்தின் வருவாயில் ஆறிலொருபங்கு வரி விதித்து வந்தான். குடிகள் பயிரிடுவதற்குச் சாதகமாகப் பல ஏரிகளையும், கால்வாய்களையும் வெட்டி நாட்டை மிக வளப் படுத்தினன். இவனது முன்னோரில் பெருமையுற்ற திருமாவளவனென்னும் கரிகாற் பெருவளத்தானைப் போல நீர்ப்பாசனங்களைச் சீர்திருத்தி நாட்டை வளம்பெறச் செய்தமையால் இவ்வரசனுக்கும் கரிகாலன் என்ன ஒரு பெயர் வழங்கலாயிற்று. கிராமங்கள்தோறுமுள்ள சிவாலய விஷ்ணு வாலயங்களைச் சீர்திருத்தி அவைகளின் பூஜை, உற்சவ முதலியவைகளுக்குப் போதுமான மானியங்களை இறையிலியாக ஏற்படுத்தினன். இவ்வரசன், தங்கள் குலதெய்வமான, சிதம்பரத்திலுள்ள ஸ்ரீ நடராஜப்பெருமான் ஸபைகளில் ஒன்றாகிய பேரம்பலத்தைப் பொன்னால் வேய்ந்து அழகு பெறச் செய்தான். அதனால், இக்குலோத்துங்க சோழனுக்குப் "பேரம்பலம் பொன் வேய்ந்த சோழன்" என்ற பெயரும் வழங்கலாயிற்று.

‡ திருநீற்றுச் சோழனென்றும் இம்மன்னனுக்கு ஒரு பெயரிருப்பதால், இவனுக்குள்ள சைவாபிமானம் இனிது விளங்கும். இவ்வரசன் சிறந்த கல்விமானாக இருந்ததுமன்றிக் கற்றோர்களைப் பெரிதும் ஆதரித்தும் வந்தான். இவ்வேந்தன் சைவசமயத்தைச் சேர்ந்தவனாயினும் பிறமதங்களில் வெறுப்புக் கொண்டவனல்லனென்பதும், எந்த

‡ திருநீற்றுச் சோழன் என்ற பெயர் முதற் குலோத்துங்கனுக்கு உண்டு என்பது பின் 9-வது அத்தியாயத்தில் விவரிக்கப்படும் திரிசூல சாஸனத்தால் விளங்குவது காண்க.

மதங்களிலும் உண்மையுண்டு என்ற நடுநிலைமையும், விரிந்த நோக்கமு முள்ளவ னென்பதும், இவன், பல, சைவ, வைஷ்ணவ, சமண, பௌத்த ஆலயங்களுக்கு அளித்துள்ள, மானியங்களாலும், மற்றும் பல வரிசைகளாலும், இனிது விளங்குவதாகும். மேலும் தஞ்சை ஜில்லா மன்னார் குடியிலுள்ள ஸ்ரீ ராஜ கோபாலஸ்வாமி கோயில் இவ்வரசனாற் கட்டப்பெற்ற தென்றும், அவ்வாலயத்திற்கு இவ்வரசன் பெயரால் ஸ்ரீ குலோத்துங்க சோழ விண்ணகரம் என்று பெயரிடப் பெற்ற தென்றும் அறியப்படுவதால் மத விஷயங்களில் இவனது சமரஸக் கொள்கை நன்கு விளங்கும்.

இவ்வரசனது ஆட்சியில், தேசமெங்கும் மண்டலங்களாகவும் சிறு நாடுகளாகவும், கோட்டங்களாகவும், கிராமங்களாகவும் பிரிக்கப்பெற்று, ஒவ்வொரு கிராமத்திற்கும் தனித் தனியே ஒரு ஸபை ஏற்படுத்தப் பட்டிருந்தது. ஒவ்வொரு கிராமஸபையும், அந்த அந்தக் கிராமத்தில் உள்ளோர்களாலேயே தேர்ந்தெடுக்கப் பெற்ற அங்கத்தினர்களால் ஆக்கப்பெற்று அச்சபையோர்களாலேயே அந்தக் கிராமத்தின், நீதிவிசாரணை, நீர்ப்பாசனம், சுகாதாரம், கல்வி, சீர்திருத்தம், ஆலய மேற்பார்வை முதலிய பொதுக் காரியங்கள் நிர்வஹிக்கப் பெற்று வந்தன. நாட்டில் வழங்கி வந்த, எடுத்தல், முகத்தல், முதலிய அளவுக் கருவிக ளெல்லாம், அவ்வப்போது அரசாங்கத்தாரால் முத்திரையிடப்பெற்று அவைகளில் குறைவுவராமல் நன்கு உபயோகிக்கப் பட்டுவருகின்றனவா வென்று ஆராய்ந்தறிய ஆங்காங்கு அதிகாரிகளும் நியமிக்கப் பெற்றிருந்தனர்.

அரசியற் காரியங்களில் அரசனுக்கே எல்லா உரிமைகளுமிருந்தபோதிலும், அரசன் "உடன் கூட்டத்ததிகாரிகள்"

என்னும் நிர்வாஹ ஸபை ஒன்றை ஏற்படுத்திக்கொண்டு அந்தச்சபை அங்கத்தினர்களது ஆலோசனையின் படியே நடந்து வந்தான். இவ்வரசனிடத்தில் யானைப்படைகள், குதிரைப் படைகள், வேல், வாள், வில் முதலிய ஆயுதங்கள் தரித்த காலாட் படைகள் பல இருந்தன. இவையன்றி, இவ்வரசனும் இவனது முன்னோர்களும், மேற்குக்கடலை யடுத்த காந்தளூர்ச் சாலை என்னுமிடத்திலுள்ள கப்பற் படைகளை அழித்ததாகவும், ஈழ மண்டலம், சாவகநாடு, நக்கவாரம், கடாரம் முதலிய தீவாந்தரங்களையும் வென்று, தங்கள் ஆட்சிக்குக் கீழடக்கியதாகவும் தெரிவதால், அக்காலத்தில் சோழஅரசர்கள், பெரிய கப்பற் படைகளையும் வைத்திருந் தார்களென்றும் தெரிய வருகிறது. படைத் தலைவர்களில் சாமந்தன், மஹா சாமந்தன், சேனாபதி, தண்டநாயகன் எனப்பல அதிகாரிகள் இருந்தனர். மேலும், அரசாங்க காரியங்களைப் பார்க்க, திருமந்திர வோலை, திருமந்திர வோலை நாயகர், விடையில் அதிகாரிகள் எனப் பல அதிகாரிகள் இருந்தனர். இம் மன்னன், தான் வென்ற பிறநாடுகளெல்லாம் தன் ஆணையில் அடங்கி யிருக்கக் கருதி ஆங்காங்குக் காவலாக நிலைப்படைகளை அமைத்தும், தன் மைந்தர்களையும், மற்ற பந்துக்களான அரசகுலத்தினர்களையும் பிரதிநிதிகளாக நியமித்தும் தன் ஆட்சியை மிக்க வலிமைப் படுத்திக் கொண்டான். தேவாலயங்களுக்கும், மடங்களுக்கும் குறைவின்றி மானியங்கள் அளித்து, அவைகள் நன்றாக நடைபெறுமாறு அவ்வப்போது அதிகாரிகளைக் கொண்டு விசாரித்தும் வந்தான். தென்னாற்காடு ஜில்லா விழுப்புரத்திற் கடுத்த திருவாமாத்தூர் என்ற தலத்திலுள்ள ஆலயத்திலுள்ள இவ் வேந்தனது ஒருசாஸனத்தில் அவ்வாலயத்தின் சந்நிதியில் திருப்பதிகம் பாடப் பதினறு குருடர்களை ஏற்படுத்தி, அவர்களுக்கு வேண்டிய

உணவுக்கும், ஆடைமுதலிய சௌகரியங்களுக்கும் போது மான ஏற்பாடுகள் அமைத்ததாகக் காணப்படுவதால், இவ் வரசனது பெருந் தன்மையையும், தர்ம சிந்தையையும், எளியார் மாட்டுள்ள அன்பையும் என்னென்று புகழ்வது! இவ்வாறு சீரும் சிறப்பும் பெற்ற இம் மன்னனைக் குடிகள் அனைவரும், மனுவின் அவதாரம் எனக்கொண்டாடித் தங் கள் உயிரினும் மேலாகக் கருதிவந்தனர்.

இவன் கி. பி. 1070-ம் வருஷம் முதல் ஐம்பது வரு ஷங்களுக் கதிகம் தென்னிந்தியாவை ஒரு குடைக்கீழ் ஆண்டு வந்தான். இவனது ஆட்சிக் காலத்தில் சோழ ராஜ்யம் மிக்க சீரும் சிறப்பும் பெற்று ஒரு மஹோந்நத வாழ்வை யுற்றிருந்ததென்று சொல்லலாம்.



## அத்தியாயம் 8.



இவ்வரசன் காலத்திற் றோன்றிய நூல்களுள் சிறந்து விளங்குவன பெரிய புராணம், கலிங்கத்துப்பரணி, வீர சோழியம், யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை, தண் டியலங்காரம் என்பவைகளாம். இவற்றுள் பெரிய புரா ணம், கலிங்கத்துப்பரணி, தண்டியலங்காரம், யாப்பருங் கலம், யாப்பருங்கலக் காரிகை ஆகிய ஐந்தும் இவ் வேந்த னது ஆட்சிக் காலத்திற் றோன்றியவையாகும். வீர சோழி யமோ இவனது இளங் கோப்பருவத்திற் சோழ நாட்டை ஆண்டுவந்த வீரராஜேந்திரனதுகாலத்தில் இயற்றப்பெற்ற நூலாகும். இந் நூல்களுள் பெரிய புராணத்தைப்பற்றி முன் ஒருவாறு விளக்கப்பட்டது.

## கலிங்கத்துப் பரணி

கலிங்கத்துப்பரணி யென்னும் நூல், இக் குலோத்துங்க சோழனது பெரிய வெற்றிகளில் ஒன்றாகிய கலிங்கப் போரைப் புகழ்ந்து கூறுவதாகும். இந்நூல், இம்மன்னனது, ஸபையிலிருந்த புலவர்களிற் சிறந்தவரும், கவிச் சக்கரவர்த்தி என்ற புகழ்ப் பெயரைப் பெற்று விளங்கினவருமான ஜயங்கொண்டார் என்னும் புலவர் பெருமானால் இயற்றப் பெற்றது.

ஆசிரியர் ஜயங்கொண்டார், தஞ்சை ஜில்லாவில், ஜைனர்களது ஆலயத்தாற் சிறப்புற்று விளங்கும், தீபங்குடியிற் பிறந்தவர். தீபங் குடியிற் பிறந்தா ரென்பதைக்கொண்டு இவ் வாசிரியரைச் சிலர் ஜைனமதத்தைச் சார்ந்தவ ரென்று கூறுவது முண்டு. அது பொருந்தாக் கூற்றென்பது அவரியற்றிய கலிங்கத்துப்பரணி யென்னும் நூலி லுள்ள காப்புச் செய்யுள்களி லொன்றாவது, ஜைனமதக் கடவுளாகிய அருகதேவன் வணக்கமாகக் கூறப்படாமை யாலும், வைதீக நெறியைப் பின்பற்றியே கடவுள் வாழ்த்துப் பாசுரங்கள் அமைந்திருப்பதாலும் விளக்கமாகும்.

இனி, பரணி யென்னும் நூல், தமிழ் நூல்களி லுள்ள தொண்ணூற்றாறு பிரபந்தவகைகளில் ஒன்றாகும்.

ஆனையாயிரம் அமரிடை வென்ற
மானவனுக்கு வகுப்பது பரணி.

என்பது இலக்கண மாதலின், யானைப் படைகளடங்கிய ஒரு பெருஞ் சேனையைச் சூறையாடி, வென்று புகழ்பெற்ற ஓர் அரசனது பெரிய வெற்றியைக் குறித்தே பரணியென்னும் நூல் இயற்றப்பெறுமெனத் தெரிகிறது. நம் சரித நாயகன் குலோத்துங்க சோழன், யானைப் படைகள் பல

அடங்கிய வலிய கலிங்கச் சேனையை அழித்துப்பெற்ற வெற்றி காரணமாக ஆசிரியர் இந்நூலை இயற்றினர். அரசனது படைத்தலைவன் கருணாகரத் தொண்டைமானே, கலிங்கப்போரை நடத்தி வெற்றி பெற்றவனெனினும் அவ் வெற்றி, அவனது தலைவனும், ஏவுதற் கருத்தாவுமாகிய, அரசனையே சார்ந்த தாதலின், இந்நூல், குலோத்துங்க சோழனையே பெரிதும் புகழ்ந்து கூறுகின்றது. எனினும், கருணாகரத் தொண்டைமானது வீரத்தன்மையை ஆங்காங்குச் சிறப்பிக் காமலில்லை.

கலிங்க வெற்றியடைந்த குலோத்துங்கன், ஆசிரியர் ஜயங்கொண்டாரைப் பார்த்துப் புன்முறுவலுடன் 'இன்று யானும் ஜயங் கொண்டா னாயினேன்' என்று கூறினான். அது கேட்ட கவிச் சக்ரவர்த்தியும் 'அங்ஙன மாயின் ஜயங் கொண்டானை ஜயங் கொண்டானும் பாடுவான்' என்று கூறி, இந்நூலை இயற்றி, அவ்வரசன் சபை முன்னே அரங்கேற்றினரென்றும், அரங்கேற்றியபோது அரசன் ஸபையில் வீற்றிருந்து, ஒவ்வொரு பாசுரத்திற்கும் ஒவ்வொரு பொன்னாலாகிய தேங்காயைப் பரிசாக வழங்கிக் கவிஞர் பெருமானைப் பெருமைப் படுத்தின னென்றும் கூறுவதுண்டு. நிற்க:—.

இந்நூல், பெரும்பாலும் வீரச் சுவையையே மிகுதியாகத் தழுவிய தெனினும், நவரசங்களும் இடையிடையே துளிர்த்துத் ததும்பப் பெற்றுத் திராக்ஷாபாகமாக அமைந்துள்ள தென்னலாம். இந்நூல், படிப்பவர்களுக்கு ஒருவிதப் புத்துணர்ச்சியையும், செவிக்கின்பத்தையும் பயக்கக்கூடிய தெளிவான இனிய நடையில் பலவகை அழகிய சந்தப் பாக்களால் நிறைந்து விளங்குகின்றது. இப்பரணி நூல், கடவுள் வாழ்த்து, கடைதிறப்பு, காடு பாடியது, கோயில்

பாடியது, தேவியைப் பாடியது, பேய்களைப் பாடியது, இந்திர ஜாலம், இராஜ பாரம்பரியம், பேய் முறைப் பாடு, அவதாரம், காளிக்குக் கூளி கூறியது, போர்பாடியது, களம் பாடியது எனப் பதின்மூன்று பகுதிகளை யுடையதாகும். இனி, மேற்கூறிய ஒவ்வொரு பகுதியையும் பற்றி விளக்கப் புகின் பெருகும்.

இந்நூலால், வேறு தமிழ் நூல்களிலும், சாஸனங்களி லுங் காணப்படாத இக்குலோத்துங்க சோழனுடையவும், இவனது முன்னோர்களான, பழைய சோழ மன்னர்களு டையவுமான, வீரச்செயல்களும், வெற்றிகளும், கல்வி, ஒழுக்கம் முதலிய மேம்பாடுகளும், மற்றும்பல அரிய விஷ யங்களும், நன்கு விளங்கும். மேலும், தென்னிந்திய தேச சரித்திரத்திற்கே இந் நூல் ஒரு சிறந்த ஆதாரமாகக் கொள்ளலாம். சிறந்த உரையாசிரியர்களுள் ஒருவராகக் கருதப்படும் அடியார்க்கு நல்லார் என்பவர், சிலப்பதிகா ரம் இந்திர விழவூரெடுத்த காதையின் உரையில் இந்நூலி லுள்ள சில பாசுரங்களை மேற்கோள்களாக எடுத்து ஆண் டுள்ளார். அதில், அவ்வுரையாசிரியர் இப்பரணியாசிரியரது பெயரை யேனும், நூற்பெயரை யேனும் குறிப்பிடாமல், கவிச்சக்ரவர்த்தி யென்னும் இவரது புகழ்ப் பெயரை மட் டும் குறித்துள்ளமையால், அவர் இந்நூலாசிரியர்பால் தமக்குள்ள நன்மதிப்பையும் பெருமையையும் ஒருவாறு காட்டியதாகக் கொள்ளலாம். மேலும், இந் நூலாசிரியருக் குப் பிற்காலத்தில் இவ்வரசன் வழித்தோன்றல்களான விக்ரமசோழன், இரண்டாங் குலோத்துங்கன், இரண்டாம் இராஜ ராஜன் இவர்களது ஆட்சிக்காலங்களில், ஆஸ்தான வித்வானாக விளங்கி வந்த, ஒட்டக் கூத்தர் என்னும் புலவர் பெருமான், தானியற்றிய தக்க யாக பரணி யென்னும் நூலில்,

"செருத்தந் திரிந்துகலிங்க ரோடத்
தென்றமிழ்த் தெய்வப்பரணி கொண்டு
வருத்தந் தணித்துல காண்டபிரான்
மைந்தன் மைந்தனை வாழ்த்தினவே"

என இக்கலிங்கத்துப் பரணியைத் தெய்வப் பரணியெனப் புகழ்வாரெனில், இவ்வாசிரியர் ஜயங்கொண்டாரது பெருமையையும், இந்நூலினருமையையும் வேறு என் சொல்லிப் புகழ்வது !

இனி, பரணி யென்ற நூல் வகையில் இக்கலிங்கத்துப் பரணியே முதனூலாகவும், உயர்வுபெற்றும் விளங்குவதால் 'பரணிக்கோர் சயங்கொண்டான்' என்று, உலகம் புகழும் பெருமையை இவ்வாசிரியர் பெறுவாராயினர்.

## வீரசோழியம்

வீர சோழியம் என்பது, ஒரு தமிழ் இலக்கண நூலாகும். இந்நூலை இயற்றினோர், புத்த மித்திரனார் என்னும் புலவராவர் இவ்வாசிரியர், வீரராஜேந்திர சோழனது ஆட்சிக் காலத்தில் விளங்கியவர். இவர் அவ்வரசன் பால் தமக்குள்ள அன்புக்கும் மரியாதைக்கும் ஓர் அறி குறியாக அவ்வரசனது பெயரால் இந்நூலுக்கு வீரசோழியம் என்று பெயரிட்டு, வழங்கினார். இப் புத்தமித்திரனார், அக்காலம், சோழ நாட்டிற்குட்பட்டதும், இப் பொழுது தஞ்சை ஜில்லாவில் அறந்தாங்கித் தாலுக்காவைச் சார்ந்ததுமான ஒரு சிறு நாட்டின் தலைவரென்பதும், இவரது தலைநகர் பொன்பற்றி யூரென்பதும், இந் நூற்பாயிரத்தாலும், நூன் முடிவிற் காணப்படும் ஒரு பாசுரத்தாலும், சிலாசாஸன ஆராய்ச்சியாலும் அறியப்படுகின்றன. புத்த மித்திரனாரென்று வழங்கும் இவரது பெயராலும், இந்நூற் பாயிரத்தில் காணப்படும் வழிபடு கடவுள் வணக்கத்தாலும் இவர் பௌத்த சமயத்தினர் என்பது தெளிவாகும்.

இந்நூல், தமிழ் இலக்கணத்தின் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி யென்னும் ஐந்து பகுதிகளையும் தொகுத்துக் கூறுவதாகும். மேலும் இந்நூல், தமிழ் வழக்குகளோடு, வட நான்மரபுகளையும் தழுவி இத்தமிழ் இலக்கிய சரித்திரத்தின் இடைக்காலத்திற் றோன்றிய நூல்களுக்கு ஓர் இலக்கணமாக வுள்ள தென்றுஞ் சொல்லலாம். இந்த வீரசோழியம் என்ற இலக்கணத்திற்கு முதனூல்கள் தொல்காப்பியமும், வடமொழியில் ஆசிரியர் தண்டி யென்பவர் இயற்றியுள்ள காவ்ய தரிசனம் என்னும் அலங்கார நூலுமாகும். இந்த வீர சோழியம் என்ற இலக்கண நூலுக்கு ஆசிரியரான புத்த மித்திரனார் மாணாக்கர் பெருந்தேவனார் என்பவர், ஓர் உரையியற்றி யுள்ளார். அந்தஉரையில் பௌத்தமதச் சார்பான பல தமிழ் நூல்களிலிருந்து ஆங்காங்கு மேற்கோள்கள் காட்டப் பெற்றிருப்பதால், அவ்வுரையாசிரியர் பெருந் தேவனாரும் பௌத்தசமயத்தவரென்றே துணியலாம்.

## யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை.

யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை யென்னும் இரு நூல்களும், தமிழ் மொழியிலுள்ள எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணியென்னும் ஐவகை இலக்கணங்களுள் நான்காவதாகிய யாப்பென்னும் செய்யுள் இலக்கண நூல்களாகும். இவ்விரு இலக்கண நூல்களையும் இயற்றிய ஆசிரியர், அமுதசாகரனார் என்னும் பெரியோராவர். இந்த அமுதசாகரனார் ஜைன மதத்தைச் சார்ந்தவர். அமுதசாகர முனிவரென்று இவர் அழைக்கப்படுகின்றமையால் நன்னூல் ஆசிரியரைப்போல இவரும் அருகமதத் துறவி யென்றே கருதவேண்டி யிருக்கிறது. இவர்க்குத் தமிழ் மொழியிற்போல வடமொழியிலும் விசேஷ பயிற்சியுள்

ளாது என்பது இவரியற்றிய இவ்விரு நூல்களிலிருந்து நன்கு விளங்குகின்றது. தொல்காப்பியக் காலத்திற்குப் பிறகு, தமிழில் வந்த விரவிய வடமொழி யிலக்கணத்தைப் பின்பற்றிய பலவகைச் செய்யுள்களின் இலக்கணங்களை யெல்லாம் இந்நூல்கள் நன்கு விளக்குகின்றன. ஆதலின் பிற்காலத்தில் செய்யுளிலக்கணங் கற்பார் அனைவரும், இந்த யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை ஆகிய இருநூல் களையே விரும்பிக் கற்பாராயினர். பிற்கால ஆசிரியர்களும் இந் நூல்களில் உள்ள உரைப் பகுதிகளைத் தத்தம் நூல் களில் மேற்கோள்களாக எடுத்துக்காட்டியும், சில சூத்தி ரங்களைப் பொன்னேபோல் தம் நூல்களோடு சேர்த்துக் கொண்டும் இருக்கின்றனர்.

யாப்பருங்கலக் காரிகைக்குக் குணசாகரர் என்னும் ஒருவர் ஓர் உரை இயற்றியுள்ளார். இந்த உரையாசிரியர் குணசாகரரும் ஜயின மதத்தவரேயென்றும், நூலாசிரிய ராகிய அமுதசாகரனுடன் பழகிய சமகாலத்தவரென் றுந் தெரிகிறது. யாப்பருங்கலமென்னும் நூலுக்கும் ஒரு பழைய உரை இருக்கின்றது. அவ் வுரையாசிரியர் பெயர் முதலிய விவரங்கள் புலப்படவில்லை.

இனி இவ்விரு யாப்பிலக்கண நூல்களை இயற்றிய ஆசிரியர் அமுதசாகரமுனிவர், நம் சரித்தலைவன் குலோத் துங்கன் ஆட்சிக்காலத்தில் சோழநாட்டில் வாழ்ந்துவந்தவ ரென்பதும், அவர் வசித்துவந்த ஊருக்கு, அவரியற்றிய யாப்பருங்கலக்காரிகை யென்னும் நூலின் பெருமை காரணமாகக் காரிகைக்குளத்தூர் என்ற பெயருண்டாயிற்

றென்பதும், தஞ்சை ஜில்லா *நீடூர் என்னுந் தலத்திலுள்ள சிவாலயத்திற் காணப்படும் இரண்டு சிலாசாஸனங்களால் அறியப்படுகின்றன. அக்காரிகைக்குளத்தூர் எவ்விடத்தது என்று இன்னும் விளங்கவில்லை. ஆனால், மேற்கூறிய நீடூருக்கு மேற்கே 4 மைல் தூரத்தில் குளத்தூர் என்று ஒரு கிராமம் இருக்கிறது. அதுவே காரிகைக் குளத்தூராய் இருக்கலாம்.

## தண்டியலங்காரம்

தண்டியலங்காரம் என்பது, தமிழிலுள்ள ஐவகை இலக்கணங்களில் ஒன்றாகிய அணியிலக்கணத்தைப் பற்றிக் கூறும் ஒரு நூலாம். இந்நூல், வடமொழியில் ஆசார்ய தண்டியென்ற ஒரு மஹா கவியால் இயற்றப்பெற்ற காவ்ய தரிசனம் என்ற அலங்கார நூலின் மொழிபெயர்ப்பாகும். இந்நூலிலிருந்து சில சூத்திரங்களைச் சிலப்பதிகாரத்தில் சில இடங்களில் அதன் உரையாசிரியரான அடியார்க்கு நல்லார், அணியியல் என்ற பெயருடன் மேற்கோளாக எடுத்துக் காட்டியுள்ளார்.

மேற்கூறிய காவ்ய தரிசனம் என்ற வடமொழி அலங்கார நூலை இயற்றிய ஆசாரிய தண்டியென்பவரே,

---

* நீடூர். காவிரியின் வடகரையில் மாயூரத்திற்கு அடுத்த ரெயில்வே ஸ்டேஷன் உள்ள ஊர். இவ்வூர், திருநாவுக்கரசு ஸ்வாமிகள், சுந்தரமூர்த்தி நாயனார் ஆகிய இருவர்களாலும் பாடப்பெற்ற தேவாரத் திருப்பதிகங்களை யுடைய தலமாகும். ஸ்வாமி பெயர் சோமநாதேச்வரர். தேவியார், வேயுறுதோளியம்மை.

மேலும், போர்த்தொழிலையே தமது வாழ்க்கையாகக் கொண்டு, அதனால் ஈட்டிய தம்முடைய பெருஞ் செல்வங்களை யெல்லாம், சிவனடியார்கள் பொருட்டும், சிவாலயங்களின் பொருட்டும் உதவிப் புகழை நிலைநிறுத்தி நற்கதி யடைந்தவரும், சிவனடியார்களிற் சிறந்த அறுபத்துமூன்று நாயன்மார்களுள் ஒருவருமான முனையடுவார் என்ற பெரியார் வாழ்ந்திருந்ததும் இத்தலமேயாகும்.

தமிழிலும், அந்தக் காவ்ய தரிசனத்தின் மொழிபெயர்ப் பாகத் தண்டியலங்காரம் என்ற இந்த நூலைத் தமிழில் இயற்றினாரென்றும் சொல்வதுண்டு. இனி இந்தத் தண்டி யலங்காரத்தின் மூலமும் உரையும் ஒருவரே இயற்றினா ரென்பது பிரயோக விவேகம் என்னும் இலக்கண நூலாசிரி யர் தம் நூலுக்கு உரையும் தாமே எழுதியதற்கு "தண்டி யாசிரியர் மூலை தாரணங் காட்டினாற் போல" என்று ஆதாரங்காட்டுவதால் இனிது விளங்கும். தமிழ்த் தண்டி யலங்காரத்தின் உரையில் உதாரணமாகக் காட்டப்பெற்று ள்ள சில பாசுரங்கள், வடமொழிக் காவ்ய தரிசனத்தின் மொழி பெயர்ப்பாகவே யிருப்பதை அந்த இரண்டு நூலுக்கும் ஆசிரியர் ஒருவரே யென்பதற்கு ஓர் ஆதார மாகக் கொள்ளப்படுகிறது. பிற்காலத்தில், தண்டியலங் காரத்தை ஏட்டிலிருந்து எடுத்துப் பதிப்பித்தோர்கள், வேறு தமிழ் நூல்களிலிருந்தும் சில உதாரணங்களையும் சேர்த்துக் காட்டியுள்ளார்கள்.

இனி, வடமொழிக் காவ்ய தரிசனம், தமிழ்த்தண்டி யலங்காரம் ஆகிய இரண்டு நூல்களையும் இயற்றிய தண்டி யாசிரியர் காஞ்சிபுரத்திலிருந்த தென்னாட்டுத் தமிழப் பிராமணரென்று சொல்வர். தமிழ்த் தண்டியலங்காரத்தில் அநபாயன் என்ற சோழ ராஜனைப் புகழ்ந்துபாடிய சில பாசுரங்களை உதாகரித்திருப்பதாலும், அந்தப் பாசுரங் களிற் சில அவ்வேந்தன் கோலுஞ் சீரும் ஓங்க வாழ்த்து முறையில் அமைந்திருப்பதாலும், மேற் கூறிய தண்டி யலங்கார ஆசிரியர், அநபாயன் என்ற பெயரையுடைய நம் முதற் குலோத்துங்கன் காலத்தவரென்றும், அந்த வேந்த னால் ஆதரிக்கப்பெற்றவரென்றும் கருத இடந்தருகின்றது.



## அத்தியாயம் 9

### அநபாய குலோத்துங்கன் என்பவன் முதற்குலோத்துங்கனே.



சைவத் திருமுறை நூல்களுள், பன்னிரண்டாந் திருமுறையெனப்படும் திருத்தொண்டர் புராண மென்னும் பெரிய புராணத்தின் ஆசிரியர் சேக்கிழா ரென்னும் பெரியார், 'அநபாய குலோத்துங்க னென்னும் சோழ சக்ரவர்த்தியின் காலத்தில் அவ்வேந்தனது அமைச்சராக விளங்கி வந்தவரென்பதும், அவர் அம்மன்னவன் வேண்டுகோளின்படி, சிவனடியார்களது சரிதங்களை, சுந்தரமூர்த்தி நாயனார் அருளிய திருத்தொண்டத் தொகை, நம்பியாண்டார் நம்பி யியற்றியுள்ள திருத்தொண்டர் திருவந்தாதி, இவைகளை முதல் நூல்களாகக் கொண்டு பெரிய புராணம் என்ற பெயருடன் ஒரு நூலாக இயற்றினரென்பதும், கொற்றவன் குடி உமாபதி சிவாசாரியர் இயற்றியுள்ள சேக்கிழார் நாயனார் புராணம் என்ற நூலால் அறியப்படுவனவாம். இந்தச் சேக்கிழார் நாயனார் புராணம் பெரிய புராணத்தின் தலைப்பிற் சேர்க்கப் பெற்றுள்ளது. சேக்கிழாரும், தாம் இயற்றிய பெரிய புராணத்தில் பலவிடங்களில் தம் அரசனை, சென்னி, அபயன், குலோத்துங்கன், அநபாயன், பேரம்பலம் பொன்வேய்ந்தோன் எனப் பல பெயர்களால் சிறப்பித்துக் கூறியுள்ளா ரெனினும், அவர் அவ்வேந்தனைப் பெரும்பாலும், அநபாயன் என்ற பெயராலேயே குறிப்பிட்டிருப்பதைக் காணலாம்.

இனி, சிலாசாஸனங்களின் மூலமாக நோக்குமிடத்துக் குலோத்துங்கன் என்ற பெயருடன் பிரசித்தமாகச் சோழ மன்னர் மூவர் இருந்தனரென்று தெரிகிறது.

ஆனால், அம்மூவருள் சேக்கிழார் கூறும் அநபாய குலோத்துங்கன் என்பவன் யாவன் என்பதைப் பற்றி அபிப்பிராய பேதங்கள் உண்டு. முதலில், கி. பி. 1070 முதல் 1118 வரையில் ஆட்சி செய்த முதற்குலோத்துங்கனே சேக்கிழார் குறிப்பிடும் அநபாய குலோத்துங்கனென்று கருதப்பட்டு வந்தது. ஆனால், ஸமீபகாலத்தில் அரசாங்கத்துச் சிலா சாஸன பரிசோதகர்கள், மேற்கூறிய அநபாய குலோத்துங்னென்பவன் விக்ரம சோழன் புதல்வனும், முதற் குலோத்துங்கனது பேரனுமான, இரண்டாங் குலோத்துங்கனேயென்று, ஒரு முடிவுக்கு வந்துள்ளார்கள். அவ்வாறு அவர்கள் தீர்மானித்ததற்குக் காரணம், தஞ்சை ஜில்லா, திருவாரூர்த் தியாகராஜஸ்வாமி கோயில் இரண்டாம பிராகாரம் மேலைச் சுவரிற் காணப்படும் ஒரு சாஸனமேயாம். அந்தச் சாஸனம் 'பூமன்னு பதுமம்' என்ற தொடக்கத்தை யுடைமையால் அது இரண்டாங் குலோத்துங்கனதே யென்றும், அந்தச் சாஸனத்தில் அநபாயன் என்ற பெயர் காணப்படுவதால், இரண்டாங் குலோத்துங்கனுக்கே அநபாயன் என்ற பெயர் இருக்கவேண்டு மென்றும், அவனே பெரிய புராணத்தில் சேக்கிழாரால் பாராட்டப்படும் அநபாயன் என்னும் வேந்தனுவா னென்றும் ஒரு முடிவு செய்து விட்டனர். ஆனால், சேக்கிழார் குறிப்பிடும் அநபாயன் என்னும் குலோத்துங்கன் முதற் குலோத்துங்கனே யென்றும், இரண்டாங் குலோத்துங்கன் அல்லன் என்றும் தீர்மானிக்கப் பல ஆதாரங்கள் இருக்கின்றன. அவை வருமாறு :—

(1) செங்கற்பட்டு ஜில்லா பல்லாவரத்திற் கடுத்த திரிசூலம் என்ற ஊரிலுள்ள தர்ம புரீச்வரர் கோயில் கர்ப்ப கிரஹம் வடக்குச் சுவரிற் காணப்படும் ஒரு சாஸனம் (312

of 1901) 'திரிபுவன சக்ரவர்த்தின் கோனேரின்மை கொண்டானுன சுங்கந் தவிர்த்த குலோத்துங்க சோழனது 39வது வருஷத்தில் அவ்வரசன், முன்னலூர் என்ற கிராமத்தைத் தனது பெயரால் திருநீற்றுச் சோழ நல்லூர் எனப் பெயர் வழங்குமாறு செய்து, அக்கிராமத்தை மேற்கண்ட கோயில் ஆராதனத்திற்காக அளித்தான்' எனக் குறிப்பிடுகின்றது. சுங்கந் தவிர்த்த குலோத்துங்க சோழன் (1070-1118) முதற் குலோத்துங்கனே யாதலால், அவனுக்கே திருநீற்றுச் சோழன் என்றும், கோனேரின்மை கொண்டானென்றும் பெயர்கள் உண்டு என்பது இந்தச் சாஸனத்தால் விளங்குவதாகும். *

(2) செங்கற்பட்டு ஜில்லா, மதுராந்தகம் தாலுக்கா, திருவானைக் கோயில் என்ற ஊரிலுள்ள திருவாலீச்வரர் கோயில் கர்ப்பகிரஹ வடக்குச் சுவரிற் காணப்படும் ஒரு சாஸனம், (363 of 1911) 'திரிபுவன சக்ரவர்த்தின் கோனேரின்மை கொண்டானுன குலோத்துங்க சோழனது 12-வது வருஷம், 293-வது நாளில், செங்மலை என்ற ஊருக்குக் குலோத்துங்கசோழன் திருநீற்றுச்சோழநல்லூர் எனப் பெயர் வழங்குமாறு செய்தான்' எனக் குறிப்பிடுகின்றது. அந்தச் சாஸனத்தில் அவ்வேந்தனது (Royal Secretary) திருமந்திர வோலை என்னும் அதிகாரி அநபாய மூவேந்த வேளான் என்பவனெனக் குறிப்பிடப் பட்டுள்ளது. இதனல், திருநீற்றுச் சோழன் என்ற பெயர் முதற் குலோத்துங்கனுக்கு உண்டு என்பது, முற்கூறிய திரிசூல சாஸனத்தால் விளக்கமாதலால், இந்தத் திருவானைக் கோயில் சாஸனம், முதற் குலோத்துங்கனுடையதே யென்பதும், அவ்வேந்தனது 'திருமந்திர வோலை' யென்னும் அதிகாரி, அநபாய

* See Tanjore Inscription 74 of 1888.

மூவேந்த வேளான் எனப்படுதலால், அநபாயன் என்ற பெயர் முதற் குலோத்துங்கனுக்கே இருந்திருக்க வேண்டும் என்பதும் தெளிவாகும்.

(3) மேலும், அந்தக் கோயில் மேலைச் சுவரிற் காணப் படும் மற்றொரு சாஸனம் (359 of 1911) அவ்வேந்தன் அதே வருஷம் அதே நாளில் அரும்பாக்கம் என்ற ஊரை அநபாயநல்லூர் எனப் பெயர் வழங்குமாறு செய்தான் எனக் கூறுகின்றது. அந்தச் சாஸனத்திலும் 'திருமந்திர வோலை' என்னும் அதிகாரி அநபாயமூவேந்த வேளான் என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும், செங்கற்பட்டுத் தாலுக்கா களத்தூர் என்னு மிடத்திலுள்ள ஒரு சாஸனத் தாலும் (346 of 1911) இவ்விஷயம் வலியுறுத்தப் படுவது காணலாம்.

சோழ ஆட்சியில், அதிகாரிகளுக்கும், அரசனால் மதிக்கப் பெற்றவர்களுக்கும் அவ்வரசன் பெயரை முன் னிட்டபட்டபெயர்கள் அளிக்கப்படுவதுண்டு என்பதற்குப் பல சான்றுகள் காணலாமாதலால், மேற்குறித்த சாஸனங் களில் காணப்படும் அநபாய மூவேந்தவேளான் என்ற பெயரும், அந்தத் திருமந்திர வோலை என்னும் அதிகா ரிக்கு முதற் குலோத்துங்கன், தன் பெயர்களுள் ஒன்றான அநபாயன் என்றபெயரை முன்னிட்டே அநபாய மூவேந்த வேளான் என்ற பட்டம் வழங்கி யிருக்கவேண்டும் என் பது தெளிவாகும்.

4. இனி, கோயம்புத்தூர்ஜில்லா, தர்மாவரம் தாலுக்கா முத்தூர் என்னும் ஊரிலுள்ள, சோளீச்வரர்கோயில் கர்ப்ப கிருஹம் வடசுவரிற் காணப்படும் ஒரு சாஸனம், வீர ராஜேந்திர தேவனது ஆட்சியில் 4வது வருஷத்தில், அவ் வூர், பெரிய நாச்சியார் ஸந்நிதியில், ஒரு திரு விளக்கு

யைக்க, உத்தமசோழ பல்லவராயன் என்பானுடைய மைந்தனொருவன் ஒரு தொகை பணம் அளித்ததாகக் கூறுகின்றது.

வீர ராஜேந்திரன் என்னும் அரசன், முதற் குலோத்துங்கனுக்கு முன் ஆட்சிபுரிந்தவன் என்பது யாவரும் அறிந்ததேயாம்.

உத்தம சோழ பல்லவராயன் என்ற பட்டம், பெரிய புராணத்தின் ஆசிரியரான சேக்கிழாருக்குச் சோழமன்னனொருவனால் அளிக்கப் பட்டது என்பது, கொற்றவன் குடி உமாபதி சிவாசாரியார் இயற்றியுள்ள சேக்கிழார் நாயனார் புராணம் என்ற நூலால் அறியலாகும். ஆகவே, சேக்கிழாருடைய மைந்தன் ஒருவனே, வீர ராஜேந்திரன் காலத்தில் தக்க வயது வந்தோனாக இருந்து, மேற் கூறிய தர்மத்தைச் செய்திருக்க, சேக்கிழார், வீர ராஜேந்திரனுக்குப் பிறகு, முதற் குலோத்துங்கன் காலம், (அதாவது 50 வருஷங்களும்) அவன் மைந்தன் விக்ரம சோழன் காலம் (அதாவது 17 வருஷங்களும்) கடந்து, அதன் பிறகு இரண்டாங் குலோத்துங்கன் காலத்திலும் வாழ்ந்து வந்து, அவ்வேந்தன் அமைச்சராக இருந்து, அவன் வேண்டுகோளின் படி பெரிய புராணத்தைப் பாடினாரெனக் கொள்வது பொருத்த மற்றதாகுமன்றோ? ஆதலின், முன் எடுத்துக்காட்டிய பிரமாணங்களால் பெரிய புராணத்திற் கூறப்படும் அநபாய குலோத்துங்கன் என்பான், முதற் குலோத்துங்கனே யென்பதும், அவன் காலத்திற்றான் சேக்கிழார் பெரிய புராணம் பாடினா ரென்பதும் விளக்கமாகும்.

இனி, மேற் கூறிய திருவானைக்கோயில், களத்தூர்ச் சாஸனங்கள் முதற் குலோத்துங்கனது ஆட்சியின் 12வது

வருஷ முடிவில் ஏற்பட்டவை யென்று தெரிவதால், சேக்கிழார் அந்த முதற் குலோத்துங்கனது ஆட்சியில் முதற் பன்னிரண்டு வருஷங்களுக் குள்ளேயே பெரிய புராணத்தைப் பாடியிருக்கவேண்டும் என்று கருத இடமுண்டாகின்றது. ஏனெனில் மேற்கூறிய திருவானைக் கோயில், களத்தூர்ச் சாஸனங்கள், அந்த அரசன் தன் அரசாங்கத்து அதிகாரி தொண்டமான் என்ற ஒருவனுக்கு அனுப்பிய உத்தரவாகக் காணப்படுகின்றன. சேக்கிழார், பெரிய புராணம் பாடியபிறகு அரசன் திருவருட் செல்வரான அப்பெரியாரைத் தன் அமைச்சராக வைத்துக்கொள்ள மனமில்லானாய் அவரது கருத்தின் படி, தில்லையம் பதியிலேயே அவரது பிற்கால வாழ் நாட்களைக் கழித்து வருமாறு செய்து, அச்சேக்கிழார் இளையசகோதரர் பாலறுவாயர் என்பவருக்குத் தொண்டைமான் என்ற பட்டமளித்து, அவரையே தனது அமைச்சராக வைத்துக் கொண்டான் எனச் சேக்கிழார்நாயனார் புராணம் கூறுவதால், சேக்கிழார் இளைய சகோதரர் பாலறுவாயரே மேற்கூறிய சாஸனங்களிற் காணப்படும் தொண்டைமானாக இருக்கவேண்டும்.

மேற்கூறிய ஆதாரங்களால், சேக்கிழாரால், பெரிய புராணத்திற் கூறப்படும் அநபாய குலோத்துங்கன் என்பவன் முதற் குலோத்துங்கனே யென்பதும், இரண்டாங் குலோத்துங்கன் அல்ல னென்பதும், தெளிவாகும்.



## அத்தியாயம் - 10.



முதற் குலோத்துங்கன் சோழசக்ரவர்த்தி யானதைப் பற்றிய ஆக்ஷேபனைகளும் சமாதானங்களும்.

நம் சரித்திரத்தலைவன் குலோத்துங்கன் சோழவாட்சியையடைந்தது ஞாயமுறைமைக்கு ஒத்ததல்லவென்றும், தன்னலங்கருதி வஞ்சனையியற்றியும், மித்திரபேதத்தை வளர்த்தும், உரியோனை மாய்த்து அபகரித்துக் கொண்டானென்றும், ஒரு சாரார் தீர்மானித்துள்ளார். ஆனால், குலோத்துங்கனது ஆட்சிக்காலத்தில் அவனது ஸபையிலிருந்த கவிச்சக்ரவர்த்தி ஐயங்கொண்டாரென்னும் புலவர் பெருமான், அவ்வரசனது கலிங்கவெற்றியைச் சிறப்பித்து இயற்றியுள்ள கலிங்கத்துப்பரணி யென்னும் நூலில், கங்கை கொண்ட சோழன், தன் மகள் வயிற்றிற் பிறந்த பேரனை இக்குலோத்துங்கனைத் தன் மகனாகச் சுவீகாரஞ் செய்து கொண்டானென்றும், இளவரசுப் பட்டமுஞ் சூட்டித் தன் மைந்தனெனவே கொண்டானென்றும், மிக்க தெளிவுறக் கூறியுள்ளார்.* இவ்விஷயம், கலிங்கத்துப் பரணியிலிருந்து மேற்கோள்களுடன் இந்நூலில் முன்னர் விளக்கப்பட்டுள்ளது.

இனி, பரணியாசிரியர் அக் குலோத்துங்க சோழனது ஸபையிலுள்ள ஒரு புலவராதலின், அவர் தம் அரசனது பெருமைகளையே கூறவந்தவரென்றும், அவ்வாறு தம்மை ஆதரிப்போரைப் பெருமைப்படுத்திக் கூறுவதே கவிவாணர்களது வழக்கமென்றும் சொல்வதோடு, கங்கை

* பௌவமடங்க வளைந்தகுடைப் பண்டித சோழன் மகன்கழலில்
தெவ்வரடைந்தமை பாடீரே சிலையாடியவலி பாடீரே—
கலிங்கத்துப்பரணி களம்பாடியது.

பண்டிதசோழன் - கங்கைகொண்ட சோழன், கங்கைகொண்ட சோழனுக்குப் பண்டிதசோழன் என்று ஒரு பெயருண்டென்பது. "பண்டித சோழன் தெரிந்த வில்லிகள்" எனத் தஞ்சைப் பெரிய கோயிலுள்ள, முதல் இராஜராஜன் சாஸனமொன்றாலும் அறியலாம்.

கொண்ட சோழனுக்கு மூன்று மைந்தர்களிருந்து அவர்கள் அம்மன்னனுக்குப் பின் சோழநாட்டை யாண்டிருக்க, அக் கங்கைகொண்ட சோழன், தன் மகள் வயிற்றுப் பேரனைச் சுவீகாரம் செய்து கொண்டானென்று சொல்வது சிறிதும் பொருந்தாதென்றும், இது குலோத்துங்கன் பாலுள்ள குற்றத்தை மறைக்கக் கருதிப் பரணியாசிரியர் செய்த கற்பனையேயாமென்றும், அப்பெரியார்பால் குறை கூறுகின்றனர். ஆனால், கங்கைகொண்ட சோழனுக்குப் பிறகு அரசாண்ட இராஜாதிராஜன், பரகேசரி இராஜேந்திர தேவன், வீரராஜேந்திரன் ஆகிய மூவரும் கங்கைகொண்ட சோழனுக்குப் பிறந்த மைந்தர்களல்ல ரென்பதும், அவனது சகோதரமுறையிலுள்ள தாயாதிகளில் ஒருவனது மைந்தர்களே யென்பதும், தென்னிந்திய சிலாசாஸனங்கள் மூன்றும் புத்தகம், முதற் பகுதி, பக்கம் 59-ல் காணப்படும் மணிமங்கல சாஸனத்தால் அறியலாம். அச்சாஸனத்தில் பரகேசரி இராஜேந்திரதேவன் கங்கைகொண்டசோழனைத் தன் சிறியதாதையென்று மிக்க தெளிவுபடச் சொல்லுகிறான். மேலும், அவன் தமையன் இராஜாதிராஜன் காலத்தில் ஏற்பட்ட ஒருசாஸனத்திலும் (மேற்கூறிய புஸ்தகம் 53-ம் பக்கம்) அவ் விராஜாதிராஜன், தன் சிறிய தாதையென்று ஒருவனைப் பெருமைப்படுத்தி முற்கூறியிருப்பதும் இதற்கு ஆதாரமாகும்.

அதுவன்றி, கங்கைகொண்ட சோழனுக்குப் பிறகு ஆண்டுவந்த இராஜாதிராஜனே, அவனது மூத்தமைந்தன் என்றும், அரசியலையேற்க உரியோன் என்றுங் கொண்டால், அவ்விராஜாதிராஜனுக்குப்பின், அவனது மைந்தன் அரசனாக வரவேண்டுமேயல்லாமல், அவன் தம்பி பரகேசரி இராஜேந்திரன் அரசனாக வர ஞாயமில்லை. இராஜாதிராஜ

னுக்கோ பல மைந்தரிருப்பது, முன் குறிப்பிட்ட தென்னிந்திய சிலாசாஸனங்கள் மூன்றும் புத்தகம் முதற் பகுதி, பக்கம் 53-மணிமங்கல சாஸனத்தால் அறியப்படுகிறது. அதாவது—"தன் சிறியதாதையையும, திருத்தமையனையும், குறிகொள் தன் இளங்கோக்களேயும், தன் திருப்புதல்வர் தம்மையும்" எனக் காணப்படுதலால் விளக்கமாகும்.

ஆனல், வீரராஜேந்திரனுக்கு முன், அவன் தமையன் பரகேசரி இராஜேந்திரன் மைந்தன் இராஜமஹேந்திரன் ஆண்டதாகப் பல சாஸனங்கள் காணப்படுவதோடு, இராஜமஹேந்திரன் அரசாண்டதாகக் கலிங்கத்துப்பரணி (இராச பாரம்பரியம்) விக்ரமசோழனுலா முதலிய தமிழ்நூல்களும் கூறுகின்றனவேயெனில், அது, இராஜமஹேந்திரன், தன் தந்தையும் சிறிய தாதையுமாகிய இருவரும், மேலைச்சளுக்கிய யுத்தத்தில் இருந்தபோது, பிரதிநிதியாக ஆண்டதாகக் கொள்ள வேண்டுவதேயாகும். அன்றி, இராஜமஹேந்திரன் தன் தந்தை இறந்தவுடன், தானே அரசுக் குரியவனென்றெண்ணி, ஆண்டு வந்திருக்கலாம். அப்பொழுது மேலைச் சளுக்கியப் போரை நடத்திவந்த வீரராஜேந்திரன், அப்போரில் வெற்றிபெற்று நாட்டிற்குத் திரும்பிவந்து, தன் வல்லமையினல் இராஜமஹேந்திரனை நீக்கியோ, போரில் வென்றோ, அல்லது வேறு வஞ்சனையாற் கொன்றோ அரசுரிமையைப் பெற்றிருக்க வேண்டும். அன்றேல், முன் குறிப்பிட்ட சளுக்கிய யுத்தத்தில் ஒருவேளை இராஜமஹேந்திரன் இறந்து மிருக்கலாம். அதன் உண்மை புலப்படவில்லை. ஆனல், வீராஜேந்திரன், இராஜமஹேந்திரன், அரசுக்கு உரியவனல்லன் என்பதை நிலைநாட்டி யிருக்கவேண்டும். ஏனெனில், இராஜமஹேந்திரன் இராஜகேசரி யென்று பட்டம் புனைந்து கொண்டிருக்க, அவனுக்குப் பின்வந்த

வீரராஜேந்திரனும், தன்னை இராஜகேசரி யென்றே கூறிக் கொள்ளுகிறான். சோழ பரம்பரையில் ஓர் அரசன் ராஜகேசரி யென்று பட்டஞ் சூட்டிக்கொண்டால், அவனை யடுத்துப் பட்டத்திற்கு வருபவன், பரகேசரி யென்றே பெயர்புனைந்து கொளவது வழக்கம். இதனால், ராஜகேசரி, பரகேசரி யென்ற பட்டங்கள் மாறி மாறி வருமே யல்லாமல், அடுத்தடுத்துத் தொடர்ந்து வராது என்பது தெளிவாகும். ஆகவே, பரகேசரி இராஜேந்திர தேவனுக்குப் பிறகு, அவன் மைந்தன இராஜமஹேந்திரன் அரசுக்குரியோனென்பதை, அவனுக்குப் பின் வந்த இராஜகேசரி வீரராஜேந்திரனும், மற்றையோரும் ஒப்புக்கொண்டிருக்க இடமில்லை. ஆதலால், இராஜாதிராஜன், பரகேசரி இராஜேந்திரதேவன், வீரராஜேந்திரன் இவர்களுக்கு சகோதர முறையாகவே, அரசுரிமை வந்திருப்பதால், இம் மூவரும், கலிங்கத்துப்பரணியிற் கூறியபடி, கங்கைகொண்ட சோழன் சுவீகார மைந்தனை குலோத்துங்கன் சிறுவனாக இருந்த காலத்தில், கங்கைகொண்ட சோழனது பிரதிநிதியாகவே ஆண்டு வந்திருக்க வேண்டும். மேலும், இம்மூவர்களது ஆட்சிக்காலமெல்லாம் கங்கைகொண்ட சோழன் வாழ்ந்து கொண்டிருந்தானென்பது முற் கூறிய மணிமங்கல சாஸனங்களால் அறியப்படுகிறது.

இனி, இராஜாதிராஜன், பரகேசரி இராஜேந்திரதேவன் ஆகிய இவ்விருவர்களது காலத்தில் குலோத்துங்கன் இளம் பருவத்தனாக இருந்தாலும், வீரராஜேந்திரனது காலத்தில் குறைந்தது இருபது வயதாவது இருக்கலாமே, அப்பொழுது ஏன் அவன் தன் அரசுரிமையை அடையவில்லை: என்றால், அப்பொழுது, சோழ நாட்டிற்கும் மேலைச் சளுக்கிய நாட்டிற்கும் பல வருஷங்களாகத் தொடர்ந்து போர்

நடந்துகொண் டிருந்தது. போர் முடிந்து நாடு அமைதியாக இருக்கும்போது அரசுரிமையைத் தான் பெறலாமென்று எண்ணியிருக்கலாம். ஆனல், வீரராஜேந்திரன் குந்தளப்போரில் வெற்றி பெற்று வந்தவுடன் கங்கை கொண்ட சோழனும் இறக்கவே, குலோத்துங்கனுக்கு அரசுரிமையை அளிக்காயல் தானே அரசாள நினைத்தனன். அதனல், பிரஜைகளும் அதிகாரிகளும், வீரராஜேந்திரனிடத்தில் வெறுப்புக் கொண்டவர்களாய் நாட்டிற் கலகஞ் செய்யத் தொடங்கினர். பல வாண்டுகளாக நடந்து வந்த யுத்தங்களாலும், தோன்றிய பஞ்சத்தினலும், பிரஜைகள் வெறுப்புக் கொண்டுள்ளாராதலின், கலகம் வலுக்க ஆரம்பித்தது. கலகத்திடையே வீர ராஜேந்திரனும் இறந்தனன். வீரராஜேந்திரன் இறந்ததற்குக் காரணம் இன்னதென்று நிச்சயித்துக் கூற முடியாவிடினும், மேலைச்சளுக்கியப் போரை முடித்து வந்து, அவன் ஒரு வருஷங்கூட அரசாள வில்லையென்று தெரிகிறது. மேலும், அவன் போரின்று திரும்பி வந்து அரசாளத் தொடங்கியதும், கங்கைகொண்ட சோழனும் இறக்கவே, நாட்டிற் கலகமுண்டானதாகத் தெரிவதால், அவன் ஆட்சியிற் பிரஜைகள் வெறுப்புக்கொண்டு தங்களுக்குரிய அரசனை குலோத்துங்கனை அரசனுக அடையவே கலகம் செய்தனர் என்று கொள்ள வேண்டியிருக்கிறது. அவ் வீரராஜேந்திரனும் அக் கலகத்திலேயே இறந்திருக்கவேண்டும். வீரராஜேந்திரன் இறக்கவே, குலோத்துங்கன் தன்னுரிமையை யடைய விரும்பிச் சோழ நாட்டிற் பிரவேசித்தான். வீரராஜேந்திரன் மைந்தன் அதிராஜேந்திரனே, பிரஜைகளும் படைத்தலைவர்களும், தனக்கு ஒற்றுமையாக இல்லாமை யறிந்து, தன் சகோதரி கணவனும், ஆகவமல்லனது இளைய மைந்தனும், இரட்டைபாடி அரசனுமாக இருந்த சளுக்கிய விக்ரமாதித்தனது உதவி

யைப் பெற்றுக் குலோத்துங்கனை எதிர்த்தான். குலோத்துங்கனும், விக்ரமாதித்தன் அதிராஜேந்திரனுக்குத் துணையாக வருவானென்பதை முன்னமேயே அறிந்துள்ளானாதலின், விக்ரமாதித்தனது தமயனும், அப்பொழுது மேலைச் சளுக்கிய மன்னனாக இருந்தோனுமான சோமேசுவரனது நட்பைப் பெற்று, தன்னை எதிர்த்த விக்ரமாதித்தனை வெருண்டோட அடித்து, அதிராஜேந்திரனையும் போரிற் கொன்று, சோழ ராஜ்யத்தைக் கைப்பற்றிக்கொண்டான்.

இனி, அதிராஜேந்திரன் அரசாண்டதாகச் சில சாஸனங்களால் தெரியவருகிறதேயெனில், அது, அதிராஜேந்திரன் தன் தந்தை வீர ராஜேந்திரன் போரில் இருந்தபோது பிரதிநிதியாக ஆண்டதாகவே கொள்ளவேண்டும். அதுவன்றி, சிலர் அபிப்பிராயப்படுகிறபடி, சோழ நாட்டில் குலோத்துங்கன் முதலில் ஒருபாகத்தைக் கைப்பற்றிக் கொள்ளவே மற்ற பாகத்தை அதிராஜேந்திரன் சில வருஷங்கள் ஆண்டு வந்திருக்கலாம் என்று கொள்வோமெனில், மேலைச் சளுக்கியப் போர் முடிந்தது, வீரராஜேந்திரன் இறந்தது, அதிராஜேந்திரன் போரில் மாண்டது, குலோத்துங்கன் முடிசூட்டிக்கொண்டது, ஆகிய இவையெல்லாம் ஒரே வருஷத்தில் (1070) அடுத்தடுத்து நடந்தவைகளாகத் தெரிவதால், வீரராஜேந்திரனுக்குப் பிறகு அதிராஜேந்திரன் ஆட்சி புரிந்ததாகக் கொள்ளச் சிறிதும் இடமில்லை. ஆதலின், போரில் அதிராஜேந்திரன் இறந்து போகவே, குலோத்துங்கன் சோழராஜ்யம் முழுவதையும் பெற்றிருக்க வேண்டும். மேலும், கலிங்கத்துப் பரணி இராஜ பாரம்பரியத்தில் அதிராஜேந்திரனைப்பற்றி ஒன்றும் சொல்லப்படவில்லை. "குந்தளரைக் கூடற் சங்கமத்து வென்ற கோனபயன் (அதாவது வீர ராஜேந்திரன்) குவ

லயங் காத்தளித்த பின்னை, இந்த நிலக்குலப்பாவை இவன் பாற்சேர (அதாவது குலோத்துங்கன்பால்) என்ன தவஞ் செய்திருந்தாள்" எனக் காணப்படுகின்றது. ஆதலின், அதிராஜேந்திரன் முற்கூறியபடி தந்தையின் பிரதிநிதியாகச் சில வருஷங்கள் ஆண்டிருக்கலாமே யொழிய சோழ நாட்டிற்கு அரசனாக இருந்து வீரராஜேந்திரனுக்குப் பின் ஆட்சி செய்தான் என்று கொள்வதற்கு இடமேயில்லை.

பரகேசரி ராஜேந்திரன் முதல், குலோத்துங்கன் ஆட்சி பெற்றது வரையில், அதாவது 1053-முதல் 1070 வரையில் ஒருவர் காலத்தில் மற்றவர் சாஸனங்களும் காணப்படுகின்றன. இன்னார்தான் சோழநாட்டை இன்ன காலத்தில் ஆண்டார்கள் என்று நிச்சயிக்க முடியவில்லை. ஆதலால், இக்காலத்தில் ஆண்டவரசர்கள் சோழ ஆட்சிக்கு உரியவர்களல்லர், பிரதிநிதிகளேயாவர் என்று தீர்மானிக்க வேண்டி யிருக்கிறது.

இனி, திருவாங்கூர் சமஸ்தானத்தில், அந்த அரசாங் கத்தாரால் பிரசுரிக்கப்பெற்றுள்ள, சாஸனங்கள் மூன்றுவது புத்தகம் முதற்பிரிவிற் காணப்படும் வீரராஜேந்திரனது ஏழாவது வருஷத்தில் ஏற்பட்ட கன்யாகுமரி சாஸனத்தில், முற்கூறிய இராஜாதிராஜன், பரகேசரி இராஜேந்திரதேவன், வீரராஜேந்திரன் ஆகிய மூவர், இராஜேந்திரசோழ தேவனுக்கு (கங்கை கொண்ட சோழன்) யாகத்திற்றோன் றும் மூன்று சுடரொளிகள்போல மைந்தர்கள் இருந்தார் கள் என அச் சாஸனத்தில் சோழ வம்சாவளியைக் கூறும் ஸம்ஸ்கிருதப் பிரிவில் 73-ம் சுலோகத்தில் காணப் படுகிறது. ஆனால், அதை ஆங்கிலத்தில் மொழிபெயர்த் துப் பதிப்பித்தோர், மைந்தர்கள் இருந்தார்கள் என்ற தோடு பிறந்திருந்தார்கள் என்று பொருள் படும்படியாக

(Born) என்ற ஒரு மொழியைப் புதிதாக இருவரேவுக் கோடுகளுக்குள் அமைத்திருக்கின்றனர். மேலும், அச் சாஸனமோ பலவிடங்களிற் பதங்கள் சிதைந்து போய் அவைகளுக்குப் பிரதியாகக் கருத்தைநோக்கி ஆங்காங்குப் பதங்களைச் சேர்த்து அமைக்கப்பட்டுள்ளது.

மைந்தர்கள் என்பது, நமது நாட்டு வழக்கில், தன் சகோதரர்களுடைய அல்லது சகோதர முறையில் உள்ளவர் களுடைய குமாரர்களையும் சொல்வதுண்டு. அம் மைந்தர் களும், தங்கள் சிறிய தகப்பன், பெரிய தகப்பன்மார் களைத் தந்தையென்றே அழைப்பதுண்டு. அப்படியழைப் பதற்கு உதாரணங்கள் உலக வழக்கோடு நமது தேச நூல்களிலும் பல காணலாம். ஆதலின், அந்த முறைப் படியே மேற்கூறிய இராஜாதிராஜன், பரகேசரி இராஜேந் திர தேவன், வீரராஜேந்திரன் ஆகிய மூவரைக் கங்கை கொண்ட சோழனது மைந்தர்கள் என்று உபசாரமாகக் கொள்ள வேண்டுமே யல்லாமல் அவனது சொந்த மைந் தர்கள் என்று கொள்ள இடமில்லை. மேலும், அக் கங்கை கொண்ட சோழனுக்கு மைந்தர்கள் இருந்தார்கள் என்பத ற்கு வேறு ஆதாரங்களும் காணோம். அன்றியும், வீரராஜேந் திரனது சகோதரர்கள் கங்கைகொண்டசோழனைத் தனது சிறிய தாதையென்று முற்கூறிய மணிமங்கல சாஸனத்திற் கூறி யிருக்க, வீரராஜேந்திரன் மட்டும் அவனது ஏழாவது வருஷ சாஸனத்தில் கங்கை கொண்ட சோழனைத் தன் தந்தையென்று சொல்வது, தான் அரசுரிமையை அபகரித் துக்கொண்ட பின் (அதாவது மேலைச்சளுக்கிய யுத்தம் முடிந்த பிறகு அவனது ஆட்சியின் கடைசி வருஷத்தில்): அரசாட்சிக்குத் தானே உரியோன் என்பதை நிலைநாட்டிக் கொள்ளவும், சுவீகார வுரிமையைப் புறக்கணிக்கவும்

கருதிச்செய்த ஒரு தந்திரமே யென ஊகிக்கவும் இடந் தருகின்றது.

இதுவன்றி, இராஜேந்திர சோழதேவனுக்குக் கங்கை கொண்ட சோழன் என்ற பெயரில்லை யென்றும், அவனது சகோதரன் ஒருவன் அப்பெயருடனிருந்தானென்றும், ஒரு நூதன கற்பனை செய்துகொண்டு அவனையே சாஸனங்களில், இராஜாதிராஜன், பரகேசரி இராஜேந்திரதேவன் ஆகிய இருவரும் சிறிய தாதை யெனக் கூறுகின்றனர் என்று அபிப்பிராயப்படுவதோடு அவ்வாறே, சோழ வம்சாவளியில் கங்கைகொண்ட சோழன் என்று வேறொருவனைக் கூட்டியும் அக் கன்யாகுமரிச் சாஸனம் பதிப்பித்தோர் காட்டியுள்ளார். இதற்கு ஆதாரமென்ன வென்பது புலப்படவில்லை. ஆதலால், அது ஸமயோசிதமாகத் தம் கருத்துக் கிணங்கச் செய்துகொண்ட ஒரு நூதன சிருஷ்டி யென்றே கொள்ளவேண்டி யிருக்கிறது.

இதுகாறுங் கூறியவாற்றால், இராஜாதிராஜன், பரகேசரி இராஜேந்திரதேவன், வீரராஜேந்திரன் ஆகிய மூவரும் கங்கை கொண்ட இராஜேந்திர சோழதேவனது மைந்தர்கள் அல்லரென்பதும், அவனது மூத்த சகோதர முறையிலுள்ள அதாவது கண்டராதித்தரது பரம்பரையில் வந்த ஒருவனது மைந்தர்களே யென்பதும், பரணியாசிரியரான கவிச்சக்ரவர்த்தியார், தம் அரசன் மேலுள்ள குற்றத்தை மறைக்கக் கருதிச் சுவீகாரம் என்ற கற்பனையைப் புகுத்தினாரென்று வீணே அப்பெரியார்மேற் குறைகூற ஒரு சிறிதும் இடமில்லையென்பதும், அவர் உண்மையை உள்ளவாறே கூறிப்போந்தாரென்பதும் விளக்கமாகும். ஒற்று நோக்குமிடத்துச் சோழராஜ்யத்தை அடையவேண்டிய உரிமையுடைய குலோத்துங்கனுக்கு வீரராஜேந்திரனும்,

அவன் மைந்தன் அதிராஜேந்திரனும் துரோஹஞ்செய்து அரசுரிமையை யபகரிக்க எண்ணினார்களென்பதும்,

"கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து"

என்ற நீதிப்படி, நம் சரிதத்தலைவனான குலோத்துங்கன் தனக்கு அனுகூலமில்லாத காலத்தில் அடங்கியிருந்து, சமயம் நேர்ந்தபொழுது, இராஜ தந்திரத்திற் கேற்ப தக்க துணைவலிகொண்டு பகைவரை வென்று, தன்னுரிமையை அடைந்தானென்பதும், அவன் செய்கை முற்றும் ஞாயமானதே யென்பதும் நன்கு விளங்குவதாகும்.

இவ்விதம், தன்பகைமை கடந்து, குலமணி மகுடம் உரிமையிற் சூடி, திக்விஜயஞ்செய்து, வெற்றிமாலைபுனைந்து, மனுமுறை யோங்க, கலியிருளிரிய, தென்னிந்திய நாடு முழுவதோடு, பல தீவாந்தரங்களிலும், ஏறக்குறைய ஐம்பது ஆண்டுகளுக்கதிகம், ஒருதனிச் செங்கோ லோச்சித் தன்னேரில்லாத் தலைவனென விளங்கிய, இவ் வருந்திறல் வாய்ந்த தமிழர் பெருமான், சோழர் பெருந்தகை குலோத்துங்கனது புகழ் உலகில் என்றுந் தழைத்தோங்கி வளர்வதாக.

* மூவாத் தமிழ்பயந்த முன்னோன் முனிவாழி
ஆவாழி வாழி யருமறைகள் — காவிரிநாட்
அண்ணல் அநபாயன் வாழி யவன் குடைக்கீழ்
மண்ணுலகில் வாழி மழை.



* தண்டியலங்காரம்

## அநுபந்தங்கள்

### முதற்குலோத்துங்கன் மெய்க்கீர்த்திகள்

†(1) ஸ்வஸ்திஸ்ரீ :—

திருமன்னி விளங்கு மிருகுவ டனையதன்
தோளும் வாளுந் துணையெனக் கேளலர்
வஞ்சனை கடந்து, வயிரா கரத்துக்
குஞ்சரக் குழாம் பலவாரி யெஞ்சலில்
சக்கரக் கோட்டத்துத் தாரா வரசனைத்
திக்கு நிகழத் திறைகொண் டருளி
அருக்க னுதயத் தாசையி லிருக்குங்
கமல மனைய நிலமகள் தன்னை
முந்நீர்க் குளித்த வந்நாள் திருமால்
ஆதிக் கேழலாகி யெடுத்தன னென
யாதுஞ் சலியா வகையினி தெடுத்துத்
தன்குடை நிழற்கீழ் இன்புற விருத்தித்
திகிரியும் புலியுந் திசைதொறும் நடாத்திப்
புகழுந் தருமமும் புவிதொறும் நிறுத்தி
வீரமுந் தியாகமும் மானமுங் கருணையும்
உரிமைச் சுற்ற மாகப் பிரியாத்
தலநிகழ் சயமுந் தானும் வீற்றிருந்து
குலமணி மகுடம் முறைமையிற் சூடித்
தன்கழல் தராதிபர் சூடச் செங்கோல்
நாவலம் புவிதொறும் நடாத்திய, கோவிரா
ஜகேசரி வர்மரான உடையார் ஸ்ரீ
இராஜேந்திர சோழ தேவர்க்கி யாண்டு :—

---

†-S. I. Inscriptions Vol - III Part 2. Page 140.

*(2) ஸ்வஸ்திஸ்ரீ :—

புகழ் சூழ்ந்த புணரி அகழ்சூழ்ந்த புவியிற்
பொன்னேமி யளவுந் தன்னேமி நடப்ப
விளங்கு சயமகளை இளங்கோப் பருவத்துச்
சக்கரக் கோட்டத்து விக்ரமத் தொழிலால்
புதுமணம் புணர்ந்து மதவரை யீட்டம்
வயிரா கரத்து வாரி யயின்முனைக்
குந்தள வரசர் தந்தள மிரிய
வாளுரை கழித்துத் தோள்வலி காட்டிப்
போர்ப்பரி நடாத்திக் கீர்த்தியை நிறுத்தி
வடதிசை வாகை சூடித் தென்றிசைத்
தேமரு கமலப் பூமகள் பொதுமையும்
பொன்னி யாடை நன்னிலப் பாவை
தனிமையுந் தவிர வந்து புனிதத்
திருமணி மகுடம் உரிமையிற் சூடித்
தன்னடி யிரண்டுந் தடமுடி யாகத்
தொன்னில வேந்தர் சூட முன்னை
மனுவாறு பெருகக் கலியாறு வறப்பச்
செங்கோல் திசைதொறுஞ் செல்லவெண்குடை
இருநில வளாகம் எங்கணுந் தனது
திருநிழல் வெண்ணிலாத் திகழ வொருதனி
மேருவிற் புலிவிளை யாட வார்கடற்
றீவாந்தரத்துப் பூபாலர் திறை விடுத்த
கலஞ்செரி களிறுமுறை நிற்ப விலங்கிய
தென்னவன் கருந்தலை பருந்தலைத் திடத்தன்
பொன்னகர்ப் புறத்திடைக் கிடப்ப விந்நாள்
பிற்குலப் பிறைபோல் நிற்பிழை யென்னும்

*S. I. Inscriptions Vol - III. Part 2. Page 156.

சொல்லெதிர் கோடிற் றல்லது தன்னை
வில்லெதிர் கோடா விக்கலன் கல்லதர்
நங்கிலி தொடங்கி மணலூர் நடுவெனத்
துங்கபத் திரைபுகத் துரத்தி யெங்கணும்
பட்டவெம் பரியும் விட்டதன் மானமும்
கூறின வீரமுங் கிடப்ப வேறின
மலைகளும் முதுகு நெளிப்ப யிழிந்த
நதிகளுஞ் சுழன் றுடைந் தோட விழுந்த
கடல்களுந் தலைவிரித் தலமரக் குடதிசைத்
தந்நா ளுநந்து தானுந் தானையும்
பன்னாளிட்ட பலப்பல முதுகும்
பயந்தெதிர் மாறின சயப்பெருந் திருவும்
பழியுகந்து கொடுத்த புகழின் செல்வியும்,
வாளா ரொண்கண் மடந்தைய ரீட்டமும்
மீளாது கொடுத்த வெங்கரி நிரையும்
கங்கமண் டலமுஞ் சிங்கள மென்னும்
பாணி யிரண்டு மொருவிசைக் கைக்கொண்
டண்டிய புகழொடு பாண்டி மண்டலங்
கொள்ளத் திருவுளத் தடைத்து வெள்ள
வருபரித் தரங்கமும் பொருகரிக் கலங்களும்
தந்திர வாரியு முடைத்தாய் வந்து
வடகடல் தென்கடல் படர்வது போலத்
தன் பெருஞ் சேனையை யேவிப் பஞ்சவர்
ஐவரும் பொருத பொருகளத் தஞ்சி
வெரிநளித் தோடி யரணெனப் புக்க
காடறத் துடைத்து நாடடிப் படுத்து
மற்றவர் தம்மை வனசரர் திரியும்
பொற்றை வெஞ்சுர மேற்றிக் கொற்ற
விஜயஸ் தம்பம் திசைதோறு நிறுத்தி,

முத்தின் சலாபமும் முத்தமிழ்ப் பொதியிலும்
மத்தவெங் கரிபடு மையச் சய்யமும்
கன்னியுங் கைக்கொண்டு புனிதத் தென்றைட்
டெல்லைசாட்டிக் குடமலை நாட்டுள்ள
சாவே றெல்லாந் தனிவிசும் பேற
மாவேறியதன் வருதினித் தலைவரைக்
குறுகலர் குலையக் கோட்டா றட்பட
நெறிதொறும் நிலைகளிட் டருளித்திறல்கொள்
வீரஸிம்மாஸனந் திரிய விட்டருளிப்
பொங்கொளி யாரமும் திருப்புயத் தலங்கலும்போல
வீரமுந் தியாகமும் விளங்கப் பார்தொறும்
சிவனிடத் துமையெனத் தியாகவல்லி
உலகமுடை யாளிருப்ப வவருடன்
கங்கை வீற்றிருந் தென மங்கையர் திலகம்
ஏழிசை வல்லபி ஏழுலக முடையாள்
வாழி யபர்த்தினி திருப்ப வூழியுந்
திருமா லாகத்துப் பிரியா தென்றுந்
திருமக ளிருந்தென வீரசிங்காதனத்து
உலகமுடை யாளோடு வீற்றிருந்தருளிய
கோவிராஜகேசரி வர்மரான திரிபுவன
சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ
தேவர்க்கி யாண்டு.

†(3) ஸ்வஸ்தி ஸ்ரீ :—

புகழ்மாது விளங்கச் செயமாது விரும்ப
நிலமகள் நிலவ மலர்மகள் புணர
உரிமையிற் சிறந்த மணிமுடி சூடி

†S. I. Inscriptions Vol - III. Part 1. Page 71.

மீனவர் நிலைகெட வில்லவர் குலைதர
விக்கலன் சிங்கணன் மேல்கடல் பாயத்
திக்கனைத் துந்தன் சக்கர நடாத்தி,
விஜயாபிஷேகம் பண்ணி வீரஸிம்ஹாஸனத்துப்
புவனமுழு துடையாளோடும் வீற்றிருந்தரு
ளிய கோவிராஜகேசரி வன்மரான
சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ
தேவர்க்கி யாண்டு.

---

Epigraphia Indica, Vol. XVIII Part II Page 64.

(4) ஸ்வஸ்திஸ்ரீ :— (354 of 1921-22)

கூறிய வுலகனைத்துங் குடைக் கீழாக்கிய
குலோத்துங்கற்கு யாண்டு நாற்பத்தாறு அதனிடை
தில்லை யம்பலத்து வடகீழ்பால் (பேரியலமட்டாடு)
சொன்னவா றறிவார் சோயிலும், புராண நூல்விளக்
கும்புரிசை மாளிகையும், வரிசையால் விளங்கப்
பொறுப்பினல் விருப்புறச் செய்தான்
சேரியற்கு ஆண்டேழ் அஞ்சுடன் மூன்றினில்
நிகரில்லாக் கற்றளி நீடேர் நிலவினர்க்கமைத்த
நிலவினன் அமுதசாகான் எடுத்த.........
தொகுத்த காரிகைக் குளத்தூர் மானவன்
தொண்டைக் காவலன், சிறுகுன்ற நாட்டுக்கற்
பகம், மிழலைநாட்டுக் கற்பகம், மிழலைநாட்டு
வேள் ஆண்டவன் கந்தன் மாதவன்.

---

(5) ஸ்வஸ்திஸ்ரீ :— (355 of 1921-22)

எண்டிசை உலகை ஒருகுடை நிழற்கீழ்
இருத்திய குலோத்துங்க சோழர்க் கியாண்டு
ஒருமுப்பத் தெட்டினில், சோணாட்டிசை
சேளார் திருவிந்தளூர் நாட்டு......... நீடிய
நீரீர் உமையொடு நிலவிய பெருமாற் குவந்து
.........மலையினர் சிலையால் உத்தம விமானம்
இங்கமைத்தான் (கண்ட)மிழ் அமுதசாகர
முனியை ஜயங்கொண்ட சோழ மண்டலத்து நான்
சிறுகுன்ற (நாட்டு) திருத்திய யாப்புநாற்
காரிகை, ஆவனூர் காடவன் மருமான், காரி
கைக்குளத்தூர் காவல் நிலையினன், எவர்க்கு
ங்கருணையும், தி(யாகமும்) காட்டிய
மிழலை நாட்டுவேள் கந்தன் மாதவன்.



# சோழவம்சாவளி


விஜயாலய சோழன். (846—880)
முதல் ஆதித்தன் (880—907)
பராந்தகன் - I (907—953)
இராஜாதித்தன்
கண்டராதித்தன்
மதுராந்தகன்
அரிஞ்சயன்
பராந்தகன் II
ஆதித்தன் II
குந்தவ்வை I
இராஜராஜன் I (985-1014)
கங்கை கொண்ட இராஜேந்திர
சோழதேவன் 1014-1070
குந்தவ்வை II
அம்மங்கதேவி - × கீழைச் சளுக்கிய ராஜராஜன்
1070—1118

இராஜாதிராஜன், பரகேசரி இராஜேந்திரதேவன், வீராஜேந்திரன்-இம்மூவரும் கண்டராதித்தன் பரம்பரையில் பிறந்தவர்களாக இருக்கவேண்டும். இவர்கள் 1035 முதல் 1070 வரையில் பிரதிநிதிகளாக ஆண்டார்கள்.

---

சோழர்களுக்கும் கீழைச்சளுக்கியருக்கும் உள்ள உறவின் முறையைக் காட்டும்

## வம்சாவளி

| சோழர்கள் | | கீழைச்சளுக்கியர்கள் |
|---|---|---|
| இராஜராஜதேவன் I | | |
| இராஜேந்திரசோழதேவன் அல்லது கங்கைகொண்டசோழன் | குந்தவை II பெண் × | விமலாதித்தன் |
| அம்மங்கதேவி | ... ... ... × | இராஜராஜ நரேந்திரன் |
| பரகேசரி ராஜேந்திரதேவன் | | |
| மதுராந்தகி பெண் | ... ... ... × | இராஜேந்திரன் II அல்லது முதற்குலோத்துங்கன். |

## இந்நூலை எழுதுவதற்கு உதவியாயிருந்த நூல்கள்.


1. South Indian Inscriptions
2. Government Epigraphist's Reports
3. Epigraphia Indica
4. Travancore Archaeological Series
5. Dr. V. A. Smith's Early History of India
6. Dr. S. Krishnasami Aiyangar's Ancient India
7. V. Rangachariar's Topographical list of Inscriptions of the Madras Presidency
8. A. V. Venkatarama Aiyar's சாளுக்கிய விக்கிரமாதித்தன்
9. T. A. Gopinatha Rao's சோழவம்ச சரித்திரச்சுருக்கம்
10. பெரிய புராணம்
11. கலிங்கத்துப் பரணி
12. வீரசோழியம்
13. விக்ரமசோழனுலா
14. தண்டியலங்காரம்
15. யாப்பருங்கலம்
16. யாப்பருங்கலக்காரிகை
17. செந்தமிழ்த் தொகுதிகள்


